உ

திருச்சிற்றம்பலம்.

வீரை. கவிராச பண்டிதர்

அருளிச்செய்த

# சௌந்தரியலகரி.

இஃது

சைவ. எல்லப்ப நாவலர்

இயற்றிய

## உரையுடன்,

S. அனவரதவிநாயகம் பிள்ளை, M.A., L.T.,

அவர்களால் பரிசோதிக்கப்பெற்று;

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.



1907.

[விலை அணா - 6.]

S. S. P. Annamalai Chetty

# முகவுரை.

ஸௌந்தர்யலஹரி என்னும் பெயரால் வடமொழியில் கிரந்தமொன்றுள்ளது. அதனையாக்கியோர் ஸ்ரீமத் சங்கராசாரிய ரென்பதே சாமானிய கொள்கை. ஆயினும், பண்டிதர்களுட் சிலர் சிறுநூல்களை ஆசாரியர்மே லேற்றுதல் பிழையென் றபிப்பிராயப் படுகின்றனர். அவ்வாறு அபிப்பிராயப் படுதல் விஷய வாராய்ச்சிக் குறைவைக் காட்டு மென்பது பின்வரும் வாக்கியங்களான் வெளியாம். இவ் வாக்கியங்கள் மைசூர் ராஜாங்கத்தாரால் வெளியிடப்பட்ட ஸௌந்தர்ய லஹரி லக்ஷ்மீதர பாஷ்யத்திற்குஅங்க்ல முகவுரையுட் காணப் படுகின்றன. "இக் கிரந்தத்திற்குப் பாஷ்யம் செய்தோருட் பெரும்பான்மையர் இது ஸ்ரீ சங்கராசாரியர் இயற்றிய தென்பர். ஆயின் டிண்டிமம் என்னும் பாஷ்யத்தைச்செய்தவர் காலத்து ஒரு ஐதிகம் இது சிவன் செய்ததென்றும், மற்றொன்று இது சிவாவதாரமாகிய ஸ்ரீ சங்கராசாரியர் செய்ததென்றும், மூன்றாவது இது லலிதாம்பிகைசெய்ததென்றும் கூற மூன்று கொள்கைகள் இருந்தன. ஸுதாவித்யோதினீ செய்த மற்றொரு பாஷ்யகாரர் இது திரமிட அரசன் ப்ரவரஸேநன் செய்ததென்பர். இக் கடைசிக் கொள்கை விசித்ரமாயிருக்கின்றது. மற்று, ஸ்ரீ சங்கராசாரியர் தங்காலத்தில் மற்றை மதங்களைச் சீர்திருத்தியதுபோல சாக்த மதத்தையும் சீர்திருத்தினர் என்பதும், அத்வைத மடங்கள் எல்லாவற்றிலும் சாக்த வழிபாடு மிக முக்யமாகக் கொள்ளப்பட்டு வருதலும், 22-வது சுலோகத்தில் ஜீவேசுவரீ தாதாத்ம்யம் கூறப் பட்டிருப்பதும், 84 - வது சுலோகத்தில் வேதாந்தம் குறிக்கப்பட்டிருப்பதும், கிரந்தத்தினது அசாமானிய நடையும், தம்முள் முரணுடைய ஸமய கௌல மார்க்கங்களில் கொள்

கைகளை ஒன்று படுத்தும் நோக்கமும், கடைசியாக லக்ஷ்மீ தரர் பாஸ்கரராஜர் முதலிய பிரபலபண்டிதர்கள் ஒரே நெறி யாக ஆசிரியர் இன்னார் என்று கூறும் உண்மையும் இவை யெல்லாம் கூடி இக் கிரந்தம் ஸ்ரீ சங்கராசாரியராற் செய்யப் பட்டதே என நம்புமா றென்னைச்செய்யும்."

வடமொழிக் கிரந்தத்தினுயர்வை இங்கெடுத்துக் கூறு தல் அநாவசியம். முற்கூறிய விஷயங்களே அதனை நன்கு விளக்கும். அன்றியும், தமிழ்ச் சௌந்தரியலகரி மொழி பெயர்ப்பு நூலேயாகலான் அதன்வளத்திற் பெரும் பான்மை கடன்வாங்கினதாகத் தானே யிருத்தல் வேண்டும். தமிழ் நூலைச் செய்தவர், பாயிரங்கூறுமாறு வீரை என்னுந் தலத் தினர் கவிராச பண்டிதர் என்னும் பெயரினர் என்று மட் டுமே அறிகின்றோம். இன்னும் இவர்க்கு வடநூலையும் வட நூற்பொருளையும் தெளிவுபடுத்தியவர் பிரமாதராய ரென் னும் கவிவேந்தர் என்றும் புலப்படுகின்றது. அதற்குமேல் இவர் காலம் சரிதமாதி விளங்குவனவாயில்லை. இவர் தேவி பக்தனென்றும் சிறந்த கவியென்றும் நூலால் தெரிகின்றது.

இவ்வரிய நூல் நடைப்போக்கினாலும் பொருள் நுட் பத்தாலும் புலவர்க்கும் விளங்கல் அருமையா யிருந்தது பற்றி உரை எழுதப்பட்டதாகல் வேண்டும். உரையின் சிறப்பை விரித்துரைத்தல் சாத்தியமில்லை. ஒரு சிறு வாக்கியத் தில் அடக்கிச் சொல்லின், இவ்வுரை ஒழிவிலொடுக்கத்திற் குச் சிதம்பரசுவாமிகள் உரை போன்றது. பாட்டிற்கு உரை மட்டுமேயன்றி இலக்கண விசேடங்களும் ஆங்காங்கே விளக் கப்பட்டுள்ளன. சாக்ததந்திர நுட்பங்களும் வேண்டியவளவு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

இவ்வுரை செய்தார் சைவ எல்லப்ப நாவலரென்பது உரையாசிரியர் பெயரைக் குறிக்க எழுந்த செய்யுளான் விள

ங்கும். சைவசமயத்தில் அசாமானிய அபிமானத்தோடு உழைத்தவராதலின் இவர் பெயர்க்கு முன் சைவ என்னும் மொழியைச் சேர்த்துபசரித்தனர் போலும். திருவெண்காட்டுப் புராணத்தில் இவர்

"செப்புமியற் றமிழ்களெலா மரியயனே
முதலாய தேவர்க் கோதி
யொப்பு விக்க வறியாம லானிடத்தே
வளைத்துவளைத் துரையா நின்றேன்."

என்றுரைத்த விடத்துப் புலப்படும் தலையன்பு ஊகிக்கற்பாலதே யன்றி உரைக்கற் பாலதன்று. "சைவத்தின் மேற் சமயம் வேறிலையதிற் சார்சிவமாம் தெய்வத்தின் மேற்றெய்வமில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்மை" என்று திருவருணைக் கலம்பகத்தில் சாற்றியவரும் இம் மஹானே.

இனி, இவர் தாழைமாநகரா ரென முன் குறித்த செய்யுள்கூற, திருவெண்காட்டுப் புராணம் பதிப்பித்தோர் திவ்ய கவி சைவ எல்லப்ப நாவலர் வரலாறு என்றெழுதியதுள் இவர் திருவெண்காட்டின் தென்மேற்கில் ஒரு கடிகை தூரத்தில் காவிரியின் வடகரையிலிருக்கின்ற இராதா நல்லூரிலே பிறந்தவரென் றுரைத்தார். தாழைமாநகர் இவ்வூர்தானோ அன்றிப் பிறிதோரூரோ என்று தெளிதற்காதாரமில்லை. அவ்வரலாறு, இவர் கார்காத்தவேளாளர் குலத்திலே காலிங்கராய கோத்திரத்திலே பிறந்தவரென்றும், தருமபுர ஆதீனத்தை யடுத்துச் சாத்திரத் தேர்ச்சியுற்று மஹா சந்நிதானத்தால் திவ்யகவி சைவ எல்லப்ப நாவலர் என்று பெயர் கொடுக்கப் பட்டவர் என்றுங் கூறும்.

உரை நூல்களுள் வேறொன்றும் இவர் செய்ததாக வழங்கக் காணுமாறில்லை. மற்று, இவர்செய்தநூல்கள்: அரு

ஞசலப் புராணம், திருவெண்காட்டுப் புராணம், செவ்வந் திப்புராணம் என்னும் திரிசிராமலைப் புராணம், திருவிரிஞ் சைப்புராணம், தீர்த்தகிரிப் புராணம், திருச்செங்காட்டங் குடிப்புராணம், திருவாரூர்க்கோவை, திருவருணைக் கலம் பகம், திருவருணையந்தாதி என்பன.

இவர் பிள்ளைப்பெருமாளையங்கார் காலத்தவரென்றும், இருவரும் ஒரே யாசிரியரிடத்துக் கல்விபயின்றவரென்றும், திருவரங்கக் கலம்பகமும் திருவருணைக் கலம்பகமும் ஒரே காலத்துச் செய்யப்பட்டனவென்றும் சிலர் கூறுவதுண்டு. அஷ்டப்பிரபந்தத்திற்கு முகவுரை எழுதிய ஸ்ரீமான் குப்பு சாமி முதலியாரவர்கள் வரையறுத்துரைத்தபடி, ஐயங்கார் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டினிடைக்காலமாயின் இரு வரும் ஏககாலத்தவரென்னுஞ் சொற்பிழைபடும். இனி, நாவலர் பிற்காலத்தவர் பதினேழாம் நூற்றாண்டில் திகழ்ந்தி ருத்தல் கூடும் என்று உத்தேசமாக உரைக்கலாமே யன்றி வரையறுத் திதுதான் இவர் கால மென்றற்குத் தக்க ஆதா ரம் அகப்பட்டிலது.

உரையோடு கூடிய இந்நூல் முதலிற் பதிப்பித்தது ஐம் பது அறுபதியாண்டுகட்கு முன்னாதல் வேண்டும். 1862 - ல் பதிப்பித்த ஒரு பிரதி என்னிடத்துள்ளதில் பிழைகள் நிர ம்ப இருக்கின்றன. சுத்தப் பதிப்பு எங்கும் வழங்குவதாகக் கண்டது மில்லை கேட்டது மில்லை யாகலானும், இந்நூலு முரையும் பலர்க்கும் உவப்பைத்தரு மென்னும் நம்பிக்கை யுடையேனாகலானும் இப்பதிப்புத் தோன்றுதற்குக் காரண மாயிருந்தேன்.

S. A. P.

உ

சிவமயம்.

# சௌந்தரியலகரி

## மூலமும் உரையும்.

### உரைப்பாயிரம்.

"தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப"

என்பது கொண்டு தேவியுடைய சரித்திரத்தையும் அவயவத்தையும் எடுத்து வடமொழியினால் முற்காலத்தில் சொல்லப்பட்ட பனுவலை மொழிபெயர்த்துத் தமிழ் மொழியில் இறக்கிச் சொல்லப்படும் பனுவல் இது ஆதலாலும், தமிழ் வழங்கும் எல்லையளவும் நடத்தலாலும், கற்போர் நாவிற்கு இனிய மொழிபடச் செய்தமையாலும், இக பரம் இரண்டினும் நல்வழிப்படுத்தும் என்பதனாலும், உரை எழுதவேண்டி, பிற்காலத்தில் சொல்லப்பட்ட பனுவல் இது என்பது கருதி, இதற்கு முற்காலத்தினும் பிற்காலத்தினும் கூறிய இலக்கண இலக்கியங்களுள் சில எடுத்துக்காட்டி, யான் அறிந்தஅளவினாலே எழுதினேன். ஆதலால், இவ்வாறு எழுதிய உரைகொண்டும், தேவியுடைய சரித்திரங்களைச்சொல்லும் பிறநூல் கொண்டும், அந்தணர் முதலிய அறிவுடையோர் சொல்லும் உபதேசம் கொண்டும், இதன் விரிவெல்லாம் தெளிந்து கொள்க.

## உரையாசிரியர் பெயர்.

பிறைபுனைந் தருளுஞ் சிவன்றன துவகைப்
 பெருக்கென வடமொழி முனிவ
னறைசவுந் தரிய லகரியைத் தமிழா
 லருள்கவி ராஜபண் டிதன்ற
னிறைமனங் கருதித் தாழைமா நகரி
 னிலைபெற வாழ்கவி யெல்லா
னிறையள வெனினுந் தவறிலா துரைதேர்ந்
 தெழுதினன் னெழில்விளக் கெனவே.



உ

சிவமயம்.

# பாயிரம்.

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

மொழிந்தமறை நூலியற்று முகபடா மணிந்துமுது
ஞான தானம்
பொழிந்துதன திணைமணியென் றிருசுட்ரும் புனைகளிற்றைப்
போற்றல் செய்வாம்
வழிந்துபெரும் புனல்பரந்து வடவரையிற் றுலகேழு
மேழு மொக்க
வழிந்திடினு மழியாத வபிராமி பாடல்வள
மளிக்க வென்றே.

உரை. கடல்களெல்லாம் தத்தம் எல்லை கடந்து மகாபிரளய சலமாகப் பரந்து வடமேருகிரியும் இறுதலை யடைந்து அம் மேருவால் நிலைபெற்ற கீழேழுலகும் மேலேழுலகும் அழிந்திடினும் அழியாத அபிராமியுடைய பனுவலாக யான் சொல்லும் பாடலுக்கு வளந்தருக என்று, சிவனால் சொல்லப்பட்ட வேதமாகிய நூலினால் இயற்றப்படும் முகபடாத்தை அணிந்து முற்றுப்பெற்ற ஞானமாகிய மதத்தைப் பொழிந்து சந்திரசூரியராகிய இருசுடரையும் தனது இரண்டு மணியாகப் புனைந்த யானையைப் போற்றல் செய்வாம்.

குறிப்பு. வேதநூலால் இயற்றிய முகபடாத்தை அணிந்து ஞானமதத்தைப் பொழிந்து சந்திர சூரியரை மணியாகப் புனைந்த களிறு எனவே, விநாயகன் என்பதாயிற்று.

முகமானது வேதமொழி யடுக்கால் துதிக்கப்படும் துதிமொழியைப் பொருந்திய வதனுல், அது முகபடாமாக உருவகஞ் செய்யப்பட்டது.

உலகு என்னும் முதற்பொருளுக்குக் கடல் மேருமுதலாயின சினைப்பொருளாதலில், "சினைவினை சினையொடு முதலொடுஞ் செறியும்" என்பதுகொண்டு புனல்பரந்து வடவரையிற்று என்று கருத்தாவைக்கொண்டு முடியும் வினையெச்சங்கள் சினைவினையாக நின்று அழிந்திடினும் என்ற முதல்வினையைக் கொண்டு முடிந்தன.

உம்மை சிறப்பு.

மேலேழுலகமாவன பூலோகம், சுவலோகம், சிவலோகம், மகாலோகம், சனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என இவை.

கீழேழுலகமாவன அதலம், விதலம், சுதலம், நிதலம், ரசாதலம், மகாதலம், பாதாளம் என இவை.

இதனுள் முகபடாமும் மதமும் மணியும் யானைக்கு இயைபுடையவாக உருவகஞ்செய்தலால் இயைபுருவகம் என்னும் அலங்காரம் காண்க.

இது விநாயகர் வணக்கம் கூறியது. (௧)

இத்தனைநா ணீயிருக்க வாயிருக்க வியலிருக்க
வருள்பா டாமன்
மத்தனையா ளுங்கொடியை யிப்போதென் வழுத்துகின்ற
வாறென் பிரேற்
பித்தனையா ரேவல்கொள்வார் பித்தொழிந்தா லுரியவர்க
ளடிமை யோலைக்
கொத்தனையா ரேவல்கொள்ளார் கொள்ளும்போ தெவனுலே
குழப்ப லாமே,

உரை. இத்தனை நாளும் மக்களினது வடிவம் எடுத்து நீ இருக்க உனக்கு உறுப்பாகிய வாயும் இருக்க அவ்வாயில் தோன்றும் இயற்றமிழும் இருக்க மத்தனை ஆளும் கொடிபோல்வாளை நினைந்து அவளுடைய அருளைப் பாடாமல் இப்பொழுது வழுத்துகின்றவாறு என் கருதி என்று என்னைப்பார்த்துச் சொல்வீராயில், பித்தனை யார் ஏவற்றொழிலுக்கு உரியவனாக்கிக் கொள்வார்? பித்து அவனிடத்து ஒழிந்தால், உரிமையாக வுடையவர்கள் அடிமைகொள்ளும் ஓலைக் கூட்டத்தை யுடையவனை எவர் ஏவல் கொள்ளார்? கொள்ளும்பொழுது எவனாலே விலக்கல் செய்யலாம்? ஒருவராலும் விலக்கல் செய்யக் கூடாது.

குறிப்பு. எவனாலே என்பதற்கு யாதுகாரணத்தினாலே என்று பொருள் உரைப்பினும் ஆம்.

அடிமையோலை - சாதனவோலை.

ஏகாரம் - ஈற்றசை.

உலகின்மேல் வைத்துரைத்த இதனைக்கருதி இவ்வாறுபோல யானும் பித்தையுடையேன் ஆதலின் அவள் ஏவல்கொள்ளாமல் இருந்தாள், பின்பு பித்து ஒழிந்தேன் ஆதலின் ஏவற்கு உரியனாக்கிக் கொண்டாள், இவ்வாறு கொள்வதனை எவனாலே விலக்கல் செய்யலாம், விலக்கல் செய்யக்கூடாது என்பது வருவிக்கப்பட்டமையால், இதனுள் ஒட்டு என்னும் அலங்காரம் காண்க.

அன்றியும்,

"ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையு
மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே"

என்பதுகொண்டு தன்மையைப் படர்க்கையாகக் கூறியதெனினும் பொருந்தும்.

இது இப் பனுவல் செய்தற்குக் காரணம் கூறியது. (உ)

யாமளைதன் பெரும்புகழை யாதிமறை நாலின்வடித்
தெடுத்த நூலை
நாமகடன் பாடலிதென் றரனுர்க்கு நவிலவவர்
நகைசெய் தன்றே
பாமகளை யருகழைத்துப் பருப்பதத்திற் பொறித்திருந்த
பரிசு காட்டுஞ்
சேமநிதிப் பாடலையென் புன்கவியாற் கொள்வதவ
டிறமை யன்றே.

உரை. யாமளை என்னும் பெயரை யுடையாளது பெரிய புகழை எல்லா நூல்களுக்கும் ஆதியாக உடைய வேதம் நான்கினுள்ளும் வடித்துச் சாரமாக எடுத்த நூலை நாவின்மகளானவள் தனது பாடல் இது வென்று சிவனுனவர்க்குப் படித்துக்காட்டச் சிவனுனவர் நகை செய்துஅப்பொழுது அப்பாவின்மகளை அருகே அழைத்துக் கைலாய கிரியில் எழுதப்பட்டிருந்த முறைமையினை அவட்குக் காட்டாநின்ற சேமஞ்செய்துவைத்த நிதிபோன்ற பாடலை எனது பொல்லாக் கவிதையால் கொள்வது அவள் திறமையே என்னுடைய திறமையல்ல.

குறிப்பு. கைலாயகிரியில் எழுதிய பாடல், நாமகள் கலைமகளாதலின், இவளிதயத்தில் தோன்றிற்று, அதனைச் சிவனுக்கு உவப்பு உண்டாமென்று படித்தாள் என்க.

'மறைநூலின் வடித்தெடுத்த நூலை' எனப் பாடம் ஓதுவாரும் உளர்.

தன் சாரியை யன்று அசை.

"இயற்பெயர் முன்ன ராரைக் கிளவி
பலர்க்குறி யெழுத்தின் வினையொடு முடிமே"

என்பது கொண்டு அரன் என்னும் பெயரின் முன் ஆர் என்பது பொருந்தி அரனர் என நின்றது. அது உயர்திணைப் பன்மை கொண்டு முடிக்கப்படும்.

இது அவையடக்கம் கூறியது. (ரு)

அரன்கயிலைப் புறத்தெழுதப் படுநூலை யருந்தவத்துப்,
புட்ப தந்தன்
பரந்தவட வரையழுத்த வதைக்கவுட பாதருளம்
பதித்து முற்றுந்
தரம்பெறுசொல் லமுதெனப்பின் சங்கரமா முனிக்கருள
வந்த மேகஞ்
சுரந்துலகில் வாடுமுயிர்ப் பயிர்தழைப்பச் சொரிந்ததெனச்
சொல்வர் நல்லோர்.

**உரை.** அரனது கைலாயகிரியினிடத்து எழுதப்பட்டிருக்கின்ற நூலை அரியதவத்தையுடைய புட்பதந்த விருடியானவன் கண்டுணர்ந்து மேலே பரந்திருக்கின்ற மேருகிரியில் பொறிப்ப அந்த நூலைக் கௌடபாத விருடியானவன் உள்ளத்தில் தரித்துப் பின் இந்த நூல் முழுதும் தகுதிபெற்ற சொல்லாகிய அமிர்தமென்று உட்கொள்ளும் படிக்குச் சங்கராசாரிய முனிக்கு அருளிச்செய்ய அந்தச் சங்கராசாரிய முனியாகிய மேகம் அருள் சுரந்து உலகில் பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களாகிய வெயிலினல் வாடும் உயிராகிய பயிர்கள் தழைப்ப வடமொழிக் கவியாகிய மாரியைச் சொரிந்தது என்று சொல்வர் நல்லறிவுடையோர்.

**குறிப்பு.** "பிறைதவழு மெழிரேன்றப் பிறங்குகதிர் வெண்கோட்டாற்,செறிகதிர்செய் தடங்குடுமிச் செம்பொன்மால் வரைவாய்ப்ப, மறைபுகழுஞ் சவுந்தரிய லகரியினை வகுத்தெழுதும், விறல்கெ

முழு வேழமுகன் விரைமலர்த்தா ளிணைதொழுவாம்'' என்று விநாய கனே இப்பனுவலை மேருகிரியில் எழுதினன் என்பாரும் உளர். இவர் வடநூலால் புட்பதந்தவிருடி எழுதினனென்பது உடன்பட்டு இவ் வாறு கூறினர்.

உயிர் என்றது மக்களை.

அந்த என்பது விரித்தல் விகாரம்; மரூஉமொழி யெனினும் அமையும். "அந்த நான்முகனை யுந்தி பூத்தோன்'' என்றார் பிறரும்.

இதனுள் சிறப்பித்து உருவகஞ் செய்தமையால், சிறப்புருவகம் என்னும் அலங்காரம் காண்க.

இது முன் இப் பனுவலை வடமொழியால் செய்தவரை வியந்து கூறியது. (௪)

### எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

இன்ன தன்மைய நூலி னைக்கவி
ராச ராசவ ரோதய
மன்ன னம்பிர மாத ராயன்
வடித்த ரும்பொருள் கூறவே
கன்ன லஞ்சிலை வேளெ னுங்கவி
ராச பண்டிதன் வீரையான்
சொன்ன யம்பெறு காவி யக்கவி
சொல்ல வென்றுதொ டங்குவான்.

உரை. கவிவேந்தர்க்கும் கவிவேந்தரா யிருப்பார் வணங்க வர த்தினல் உதயஞ்செய்த கவிவேந்தனகிய நம்முடைய பிரமாதராய ரென்னும் பெயரையுடையான் மேற்கூறப்பட்ட தன்மையையுடைய வடநூலின் எடுத்துச் சொல்லுதற்கு அரிய பொருள்கள் எல்லாம்

வடித்துக் கூற, வடிவினுல் அழகிய கருப்புச் சிலையையுடைய வேளெ ன்று சொல்லப்படும் கவிராச பண்டிதனென்னும் சிறப்புப் பெயரை யுடையான், வீரையென்னும் ஊரையுடையான், நயம் பெற்ற சொல் லால் தொடுக்கப்பட்ட காவியத்துக்கு உரித்தாகிய தமிழ்க் கவிதை யைச் சொல்லவேண்டுமென்று ஆரம்பிப்பான்.

**குறிப்பு.** வடமொழிச் சந்தியாகலால் ரகாரம் மொழிக்கு முத லாயிற்று.

இது இத் தமிழ் கூறினர் இன்னரென்று பாயிரம் கூறுதற்கு உரியார் கூறியது. (ரு)

**வ**டமொழி யெனும்பழைய விரிகடல் பிறந்திறைவர்
மனையிடை யிருந்து சிலைமே
லிடமொடு தவழ்ந்துதன திடுபெயர் சவுந்தரிய
லகரியென நின்று வளர்மா
தடலரசு முன்பினுள பலமதப்ர பந்தமெனு
மடுபகை துரந்தென் மணிநா
நடமிடு பெருங்கவிதை மடுகரி யொடும்புவியை
நகரிவலம் வந்த திதுவே.

**உரை.** வடமொழியாகிய பழைய விரிந்த கடலினிடத்துப் பிற ந்து, சிவனுடைய மனையாகிய கைலாயத்தில் எழுதப்பட்டிருந்து, பின்பு அவனுடைய வில்லாகிய மேருவின்மேல் விரிவோடு தவழ்ந்து, தனது இடுபெயர் சௌந்தரியலகரி யென்று சொல்ல நின்று, வளர் ந்த அழகையுடைய தேவியாகிய வெற்றியரசு முன்பாக உலகத்தில் உள்ள பலமதங்களுடைய பிரபந்த மென்னும் அடுதற்கு உரிய பகை யைத் துரந்து, அழகையுடைய எனது நாவில் நடிக்கின்ற பெரிய கவிதையாகிய மதயானைமேல் ஏறி, இப்புவியை நகரியாக வலம்வந் தது இச் சரித்திரம்.

குறிப்பு. மாது பண்பாகுபெயர்.

தேவியுடைய சரித்திரம் கருத்தா ஆதலின், அதற்கு எற்ற உருவகஞ் செய்யக் கருதினமையால் என்மணிநா நடமிடு பெருங்கவிதை மதகரி என்றது தன்னைப்புகழ்தல் அன்றென்க. "பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த, நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே" என்றார் பிறரும்.

ப்ரபந்தம் என வடமொழி தமிழ் மொழியாகத் திரியாது கூறியது முடுகு சந்தம் நோக்கி. "சக்ரவா ளத்திளம் பேடைகா ணுரைகாள்" என்றார் மேலோரும்.

இங்கே இந்த நூலுக்குப்பெயர் சௌந்தரியலகரியென்று சொல்லப்பட்ட தாயினும், 'சிவ' மென்னும் கவிமுதல் 'நீநந்து' மென்னும் கவியளவும் தேவியின் இன்பப்பெருக்கைச் சொல்லுதலால் **ஆனந்தலகரி** யென்றும், அப்பால் அவளழகின் பெருக்கைச் சொல்லுதலால் **சௌந்தரியலகரி** யென்றும், வழங்குமென் றறிக.

லகரி என்பது பெருக்கு.

இதனுள் பிறந்து இருந்து தவழ்ந்து நின்று பகைதுரந்து மதகரிமேலேறி வலம் வந்தது என்றதனல், தொழில் பற்றிய தன்மை என்னும் அலங்காரமும், ஒன்றை உருவகித்தும் ஒன்றை உருவகியாமலும் உரைத்தமையால் வியனிலையுருவகம் என்னும் அலங்காரமுங் காண்க.

இது தேவியுடைய சரித்திரத்தின் திறம் கூறியது. (சு)

பாயிரம் முற்றிற்று.



# ஆனந்தலகரி.

**எழுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்.**

சிவமெ னும்பொருளு மாதி சத்தியொடு
சேரி னெத்தொழிலும் வல்லதா
மிவள்பி ரிந்திடி னியங்கு தற்குமரி
தரிதெ னுமறை யிரைக்குமா
னவபெரும் புவன மெவ்வ கைத்தொழி
னடத்தி யாவரும் வழுத்துதா
ளவனி யின்கணொரு தவமி லார்பணிய
லாவதோ பரவ லாவதோ.

உரை. சிவமென்று சொல்லப்படும் மெய்ப்பொருளும் ஆதிசத்தியோடு சேரில், எத்தொழிலும் நடத்த வல்லதாம்; இச் சத்தி பிரிந்திடில் அப்பொருள் அசைதற்கும் அரியது அரியது என்று வேதங்கள் முழங்காநிற்கும். ஆதலால், ஒன்பது வியூகமாக இருக்கின்ற பெரிய புவனத்தைப் படைத்தல் காத்தல் அழித்தல் முதலாய எவ்வகைப் பட்ட தொழிலையும் நடத்துகின்ற யாவரும் துதிக்கும் அவளுடைய பாதத்தை இவ்வுலகினிடத்து அனேகந்தவம் செய்தவர்களன்றி ஒரு தவமும் செய்யாதவர்கள் மெய்யினுல் வணங்கக் கூடுமோ, வாக்கினுல் புகழ்தல் செய்யக் கூடுமோ? கூடாது.

குறிப்பு. இதனுல் அவளை யன்றி எவ் வகைப்பட்ட உயிர்கட்கும் ஓர்செயல் இல்லை என்பது பெற்றும். சந்திரகிரணமும் சந்திரகாந்தமும் சேரும்பொழுது நீர் தோன்றியும், பிரியும்பொழுது நீர் ஒழிந்

தும் இருப்பதுபோல, மெய்ப்பொருள் சத்தியோடு சேரில் உலகத்தைப் படைத்தல் முதலாகிய தொழில்கள் உளவாயும், பிரியில் அப்பொருள் அசைவின்றி இருப்பதினால் அத்தொழில்கள் இலவாயும் இருக்கும் ஆதலால் இவ்வாறு கூறினர். வாமகேசுர தந்திரத்தில் சத்திகோணம் ஐந்துடனே சிவகோணம் நாலும் கூடுவது முத்தொழிலும் உண்டாதற்குக் காரணம் என்று சொல்லப்பட் டிருப்பதினாலும் இப் பொருள்கொள்க. ஆண்பெண் கூடி உலகத்தில் தொழில் நடப்பதற்கும் இதுவே காரணம்.

'எத்தொழிலும் வல்லவாம்' என்பது பாடமாயின் பன்மை மெய்ப்பொருள்மேல் ஏறாது; தொழில்மேல் ஏற்றினும் இயங்குதற்கு மரிதரிது என்பதனாலும், உம்மைகளினாலும், இதற்கு முற்பனுவலாகிய கிரந்தப்பொருட்கு மாறுபடுதலாலும் பொருந்தாது என்பது நோக்கி, அது பாடம் அன்றென்க.

நவ வியூகமாவன காலவியூகம், குலவியூகம், நாமவியூகம், ஞான வியூகம், சித்தவியூகம், நாதவியூகம், விந்துவியூகம், கலாவியூகம், சிவ வியூகம் என இவை. இவற்றுள் நிமிடம் முதல் கற்ப மளவும் கால வியூகம்; ஆதலால், சூரிய சந்திராதிகள் எல்லாம் அடங்கின. அவ்வாறு நவ வியூகங்களுள்ளும் உலகமெல்லாம் அடங்கும். வியூகம் - கூட்டம்.

ஆல் - அசை.

பொருளும் என்பதன் உம்மை உயர்வு சிறப்பு.

இயங்குதற்கும் என்பதன் உம்மை இழிவு சிறப்பு.

எத்தொழிலும் யாவரும் என்பவற்றின் உம்மைகள் முற்றும்மை.

ஒகாரங்கள் இரண்டும் எதிர்மறை.

இது சத்தியையன்றிச் சிவத்துக்கு ஓர் செயல் இல்லை எனக் கூறியது.

(க)

பாத தாமரையி னுண்டு கட்பரம
வணுவி னிற்பல வியற்றினால்
வேத நான்முகன் விதிக்க வேறுபடு
விரித லைப்புவன மடையமான்
மூத ராவடி வெடுத்த னந்தமுது
கணப ணாடவி பரிப்பமே
ஊத னார்பொடி படுத்து நீறணியி
னுமு ரைத்தெனவள் பான்மையே.

**உரை.** தேவியுடைய பாதாரவிந்தத்தில் பொருந்திய நுண்ணிய துகளாகிய பரமாணுவைக் கொண்டு பலவகை இயற்றுக்களினால் வேதங்களையுடைய நான்முகன் வேறுபட்டிருக்கின்ற விரிந்த இடத்தையுடைய புவனம் அடங்கலும் படைக்க, அப் புவனங்கள் யாவையும் திருமாலானவன் பெரிய பாம்பின் வடிவு எடுத்து அனேகம் பெரிய படக் கூட்டமாகிய அடவியினால் தாங்க, அதற்குமேல் உருத்திரனானவர் அவற்றைப் பொடிபடுத்து விபூதியாக மெய்யில் பூசிக் கொள்ளுவாரெனில், நாம் உரைத்ததினால் அவள் சரித்திரம் யாது அடங்கிற்று? ஆதலால் அடங்காது.

**குறிப்பு.** இதனால் அவள் பாதாரவிந்தத்தையே கருதுதல் வேண்டும் என்பது பெற்றாம்.

அனந்தம் என்பது பன்மைப்பட நின்றது.

அணுவினாலே புவனங்கள் விதிக்கப்பட்டன என்றே ஆகமங்கள் துணிந்தன. ஆலம் வித்தினால் பெரிய ஆலமரம் உண்டாக்குவது போல் அணுக்களினால் புவனங்களை நான்முகன், உண்டாக்குவன்.

ஒருலகத்தின்கண் உள்ள உயிர்கள் ஒருலகத்தின்கண் இன்மையானும், உணவு முதலாயின வேறுபட்டமையானும், இடம் வேறு

பட்டமையானும், வேறுபடு புவனம் என்றும், காக்குந் தொழிலுடைய வன் திருமால் ஆதலால், 'மான் மூத ராவடி வெடுத்த னந்தமுது கணப ஞுடைவி பரிப்ப' என்றும் கூறினர்.

இது தேவியுடைய பாததூளியே மூத் தொழிற்கும் காரணம் எனக் கூறியது. (உ)

அறிவி லர்க்கிதய திமிர மீருமள
வற்ற வாதவ ரளப்பிலா
வெறிக திர்ப்ரபை குழைத்தி ழைத்தனைய
தீவி யாமளை நினைப்பிலார்
செறிம திக்கிணரி னொழுகு தேனருவி
தெறுக லிக்கருண் மணிக்குழாம்
பிறவி மைக்கடல் விழாதெ டுப்பதொரு
பெருவ ராகவெண் மருப்பரோ.

**உரை.** யாமளையானவள் அறிவில்லாதவர்க்கு அவருடைய நெஞ்சத்திலே உள்ள அந்தகாரத்தை அறுக்கின்ற அனேகஞ் சூரியருடைய எண்ணிறந்த எறிக்கின்ற கதிரினுடைய காந்திகளை ஒன்று படக் குழைத்துச் செய்ததுபோன்ற தீபமாய் விளங்காநிற்கிருள். தாமத குணத்துடனே கூடியிருக்கின்றவருடைய மடிக்கும் உள்ளத்துக்குப் பூங்கொத்திலே நின்று ஒழுகும் தேன்பெருக்காய் இருக்கிருள். ஒருவரை நெருக்கும் வறுமைக்கு அவ்வறுமைதீர விரும்பியவைகள் எல்லாம் கொடுக்கும் சிந்தாமணிக் கூட்டமாய் இருக்கிருள். ஒருவரைப் பிறவியாகிய இருட்கடலினிடத்து விழாது எடுப்பதற்குத் திருமால் அவதாரஞ்செய்த ஒப்பற்ற பெரியவராகத்தினுடைய வெள்ளிய கோடாக இருக்கிருள்.

**குறிப்பு.** இதனல் அவளையன்றி ஓர் நன்மை அடைவதில்லை என்பது பெற்றும்.

தாமதகுணத்தினுடனே கூடி இவளை நினையாதிருக்கின்றவர்களை ஆட்கொள்ளவேண்டி அவர்கள் உள்ளத்துக்குப் பூங்கொத்திலே நின்று ஒழுகும் தேன்பெருக்காய் இருக்கின்றபடியினலே 'நினைப்பிலார் செறிம திக்கிணரி னொழுகு தேனருவி' என்றும், ஒருகாலத்தில் பூமி கடலுள் தாழ்ந்து போதலினல் திருமால் பன்றியினுருவம் எடுத்துத் தன்னுடைய கொம்பினல் அதனை ஏந்தி நிறுத்தினதுபோலப் பிறவியாகிய கடலினின்றும் கரையேற்றுதற்கு 'பெருவராக வெண்மருப்பு' என்றும் உருவகஞ் செய்தார்.

தீவு - மண்டலம்.

அரோ - அசை.

இதனுள் யாமளை என்னும் ஒரு பொருளைப் பல பொருளாக உருவகஞ் செய்தமையால் அற்புதவுருவகமும், அவ்வொரு பொருளைப் பலவிடத்தும் நின்ற சொற்களோடு பொருந்திப் பொருள் தர உரைத்தமையால் தீவகமும் தோன்றவே, அற்புத வுருவக தீவகம் என்னும் அலங்காரம் காண்க.

இது நன்மைகளெல்லாம் தருவதற்குத் தேவியே காரணம் எனக் கூறியது. (௩)

தேவெ னப்புகழ வதினி மிர்ந்துநிகர்
	செப்பு வாரபய வரதமாம்
பாவ கத்தபின யத்தொ டுற்றகை
	பரப்பி யென்பய மொறுக்குமே
யாவ ருக்குமஃ தரிது நின்பத
	மிரப்ப யாவைவு மளிக்குமான்
மூவருக்கு மொரு தாவரப் பொருளென்
	மூல மேதழையு ஞாலமே.

**உரை.** அயன் அரி அரன் என்னும் மூவருக்கும் உற்பவிக்கும் காரணப்பொருளென்று சொல்லப்பட்ட வேரானது வளரும் ஓர் பூமி

யானவளே, உன்னையல்லாத் தெய்வங்களையும் தெய்வமென்று புகழ அதனால் இறுமாந்து உனக்குத் தாமும் நிகரென்று சொல்லும் அத் தெய்வங்களுடைய அபயமும் வரதமுமாகிய பாவகத்தினால் அபிநயத்தோடு உற்ற கைகளானவை, அவ்வாறு விரித்து யாது பயத்தைப் போக்கும் ? உன்னையல்லாத யாவர்க்கும் பயத்தைப் போக்குதற்கு அரிது. அவை அப்படியாக, நின்னுடைய பாதங்களே ஒருவரால் இரக்கப்படுவன யாவையும் கொடுக்கும்.

குறிப்பு. இதனாலும் உன்னையன்றி ஓர் நன்மை அடைவது இல்லை என்பது பெற்றும்.

நிகர் செப்புவாருடைய கை எனக் கூட்டுக.

பயம் என்றது அபயவரதத்துக்கு ஏற்பப் பகையினால் வரும் அச்சமும், வறுமையினால் வரும் அச்சமும் ஆம்.

இரப்பு என்றது பகையினால் வரும் இரப்பும், வறுமையினால் வரும் இரப்பும் ஆம்.

உற்பவிக்கும் காரணப்பொருள் என்று சொல்லப்பட்ட வேர் முக்குணங்கள்; அது வளரும் ஓர் பூமியானவள் என்க.

ஏகாரம் - பிரிநிலை.

'தாவரப்பொருளின் மூலமே தழையுஞாலமே' என்று பாடமாயின், உற்பவிக்கும் காரணப் பொருளினுடைய வேரானவளே, விரிந்திருக்கும் உலகின்வடிவாய் இருக்கின்றவளே எனப் பொருளுரைக்க.

ஆல் - அசை.

இது தேவியுடைய பாதமே இச்சித்ததெல்லாம் கொடுக்கும் எனக்கூறியது.

(ச)

தொடுக ரச்சிலை தொடப்பொ ருமலர்
சுருப்பு நாணிடுவ தைந்துகோ

லடுப டைத்தலைவ னூர்வ சந்தமலை
தென்ற றேருருவ மருவமா
மூடிகு கொற்றமத னொருவ னிப்புவன
முற்றும் வெற்றிகொள முடிவிலா
நெடும லர்க்கணருள் சிறித ளித்தனைகொ
னீலி யேகரக பாலியே.

உரை. நீலநிறத்தை உடையவளே, கரத்திலே கபாலத்தை உடையவளே, அம்பு தொடுக்குங் கையிற்பிடித்த வில்லானது கையினல் தொடுதற்கும் பொறுத மலர், அதற்குவண்டே நாண், எய்வதும் ஐந்தம்பே, அடுந்தொழிலை யுடைய படைத்தலைவனவர் வசந்தகாலம், போரிற் செலுத்துகின்ற தேர் மெல்ல இயங்குகின்ற தென்றற்சாற்று, உருவமும் அருவமே, இவ்வுறுப்புகளையுடைய யாவரையும் முடுகுகின்ற வீரத்தைப் பொருந்திய காமனும் வேறோர் துணையில்லாத ஒருவனே, இப்படி நொய்வாயிருக்கின்றவன் இப் புவன முழுதும் வெற்றிகொள்ளும்படிக்கு, நெடிய மலர்போலுங் கண்ணினின்று ஒழியாத அருளிற் சிறிது அவனுக்குக் கொடுத்தனையோ? எனக்கு அறியப்படுவதாய் இருக்கவில்லை, நீ சொல்வாயாக.

குறிப்பு. இதனல் நின்னருளன்றி ஒருவர்க்கும் வலி இல்லை என்பது பெற்றும்.

நீ சொல்வாயாக என்பது எஞ்சி நின்றது.

கருப்புச் சிலை மறையப் பூமாலை சுற்றியிருக்கப்படுதலால், ஒற்றுமை நயம்பற்றி மலர் சிலை எனப்பட்டது.

விகாரத்தால் சுரும்பு சுருப்பு எனவாயிற்று.

"உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே"

என்பது கொண்டு படைத்தலைவனார் என்னும் உயர்திணைப்பெயர் வசந்த காலம் என அஃறிணைப் பெயராயிற்று.

ஐந்தம்பாவன தாமரை, சூதம், அசோகம், முல்லை,நீலம் இவை.

கொல் - ஐயம்.

அருளில் சிறிது அளித்தனை ஆகலால் உனது பெருமையே பெருமை என்று பொருளுரைத்து, கொள்க என்பதை அசையாக்கினும் பொருந்தும்.

ஒருவனுக்குக் கேடுதானே ஆக்கம் என்றாற்போல அருவந்தானே உருவம் என்றார்.

"குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்,
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம்"

என்பது கொண்டு மதன் என்னும் ஒருபொருள் உறுப்புகளினால் குறைபட்டும் அப் பொருள் மேம்படுவதாக உரைத்தமையால், இதனுள் உறுப்புக்குறை விசேடம் என்னும் அலங்காரம் காண்க.

"யானை யிரதம் பரியா ளிவையில்லைத்
தானு மனங்கன் றனுக்கரும்பு - தேனார்
மலரம்பா வென்று வடுப்படுத்தான் மார
னுலகங்கண் மூன்று மொருங்கு."

இஃது அவ்வலங்காரத்துக்குப் பிறர் காட்டிய பாட்டு இருத்தலானும் அறிக.

இது தேவி யருளின் செய்கை கூறியது. (ரு)

**மா**யன் வணங்கியுன் மால்வடி வங்கொள
வாடு மரன்றுயர் போதாதோ
தூய மதன்றெழ வாண்வடி வம்புணர்
தோகைகண் வண்டயி றேனேபோன்

மேய வழங்குமு ரூபம தென்சொல
மேலிது கண்டவர் வாழ்வாரோ
நீபதி ரஞ்சகி மோகன வஞ்சகி
நீசெய்வ தொன்றல மாதாவே.

**உரை.** தாயே, திருமாலானவன் உன்னைப் பூசித்து வணங்கிய வதனால் பண்டு மயக்கத்தைச் செய்யும் உன்னுடைய பெண்வடிவைக் கொள்ள, அப்பொழுது சிவன் வாடுந்துயரம் அமையாதோ? தூய்மை யுடைய காமனானவன் உன்னைப் பூசித்துத் தொழ, அவனுக்கு ஆண் வடிவத்தினுள் அவனோடு புணரும் இரதியுடைய கண்களான வண்டு கள் உண்கின்ற பூந்தேன்போல உண்ணும்படிக்கு நீ அப்பொழுது கொடுக்கின்ற அழகின் பெருமையை எவ்வாறு உரைப்பேன்? சிவனும் இரதியும் இவ்வாறுயினர் என்றால், இவரன்றி இவ்விருவகை வடி வையுங் கண்டவர்கள் உயிருடன் இருந்து வாழ்வாரோ? ஆகலால் நீ மிகவும் பிரியம் பண்ணுகின்றவள், மோகனத்தினாலே வஞ்சிக்கின்ற வள், நீசெய்வது ஒரு செயலல்ல.

**குறிப்பு.** இதனால் உன்னைப் பூசித்தவர்கள் அடையப்படாத வர மெல்லாம் அடையலாம் என்பது பெற்றும்.

செய என்னும் வினையெச்சத்தைத் தன்மை யொருமை வினை முற்றாக்குக.

பூவில்லும், பூவம்பும், சைத்தியம், சௌரப்பியம், மாந்தியம் என் கின்ற முக்குணங்களோடு கூடிவருகின்ற தென்றற்றேரும், அமுத கிரணங்களையுடைய திங்கட்குடையும், பூஞ்சோலையாகிய பாசறை யும் உடையவனாதலால் 'தூயமதன்' என்றும், சிவனால் வரம்பெற்ற ஓரிருடி அச் சிவனைக் கொல்லக் கருதிச் செல்லும்பொழுது திரு மாலானவன் தேவியுடைய வடிவை யெடுத்து அவ் விருடியை வஞ் சித்துக் கொன்றான், அதனை யறிந்து அவ் வடிவைக் காட்டுவாயாக

என்று சிவன் அத் திருமாலைக் கண்டு சொல்ல, மீண்டுந் தேவியினுடைய வடிவங் கொண்டபடியினாலே சிவன் விரகத்தை யடைந்தான் என்பது முற்கதை யாகலால், 'வாடு மரன்றுயர் போதாதோ' என்றும் கூறினர்.

மேய்தல் - உண்ணுதல்.

அது என்பது பகுதிப்பொருள் விகுதி.

ஒகாரங்கள் இரண்டும் எதிர்மறை.

இதனுள், உருவத்திற்குத் தேனையும் கண்ணிற்கு வண்டையும் உவமையாக்கிய வதனாலும், வண்டு உண்பதைக் கண் உண்பதற்கு உவமையாக்கிய வதனாலும், பண்புந் தொழிலும் பற்றிய வுவமை என்னும் அலங்காரமும், மோகனவஞ்சகி என்று இகழ்வதுபோலப் புகழ்ந்தமையால், புகழாப் புகழ்ச்சி யலங்காரமும் காண்க.

இது தேவியை வந்தித்துப் பெற்றோர் பயன் கூறியது. (சு)

மேகலை பொங்கம தாசல கும்பமெ
 ழுழலை கண்டிடை சோராநீர்
மாகவ ளங்கெழு நாணிறை யம்புலி
 வாண்முக மம்புவி லேடார்போ
தேகநெ டுங்கழை பாசமொ டங்குச
 மேர்பெற வந்தருள் காபாலி
நீகம லந்திகழ் தாள்வரு டென்றர
 னீர்மையின் விஞ்சிய கோமாதே.

**உரை.** கபாலத்தை யுடையவளே, அரனது நீர்மையினும் மிகுந்த ஒளியை யுடையமாதே, கமலம்போல் விளங்குகின்ற என்னுடைய தாள்களை அடிமைத் தொழிலை உடையானென்னும் உரிமையால் நீ வருடு என்று, என்முன், மதத்தையுடைய யானையினது மத்தகந்தா

னே என்று மூலையைக் கருதி அச்சமுற்று மருங்கு நுடங்க அதன் மேல் கிடக்கின்ற மேகலை அசைய நீருண்ட மேகங்கள் வளம் பொருந்துகின்ற நாளில் பதினாறு கலையும் நிறைந்த அம்புலிபோலும் ஒளி பொருந்திய முகத்தோடுகூடி இதழ் பொருந்திய பூவம்பும் ஒப்பற்ற நெடிய கருப்புவில்லும் பாசமும் அங்குசமும் நாலுகையினிடத்தும் அழகுபெற வந்தருள்வாயாக.

குறிப்பு. இதனால் நீ என் முன்வரின் எல்லா இன்பங்களையும் அடைவேன் என்பது பெற்றாம்.

கோமாது என்பதற்குத் தெய்வ மகளிர்க்கெல்லாம் இராசமாதே என்று பொருள் உரைப்பினும் அமையும்.

என்னுடைய தாளைவருடு என்று என்முன் இவ்வண்ணம் வந்தருள் எனக் கூட்டுக.

மதத்தையுடைய அசலம் எனவே, யானை என்பதாயிற்று.

"சொற்றிரியினும் பொருடிரியா வினைக்குறை"என்பது கொண்டு சோரா என்னும் வினையெச்சத்தைச் சோர எனக் கொள்க.

"நீர்மாக வளங்கெழு நாணிறை யம்புலி" என்றது சாற்காலத்துச் சந்திரனை. அஃது ஒளி விளங்கி இருக்கும்.

அம்பும் வில்லும் பாசமும் அங்குசமும் சொல்லவே,நாலு கைகள் என்பது வருவிக்கப்பட்டது.

இதனுள் அம்பும் வில்லும் நிரலே நிறுத்தி, முறையே போதுகழை எனப் பொருள் கொண்டமையால், நிரனிறை என்னும் அலங்காரம் சாண்க.

இது தேவியை நோக்கி என்முன் வந்தருள் எனக் கூறியது.(எ)

ஆரமு தின்கடல் வேலி செழுந்தரு
வாய்மணி பம்பிய தீவூடே

பாரக டம்படர் கானி லருங்கொடை
பாய்மணி மண்டப வீடே
கோரசி வன்பர மேசனுன் மஞ்சமொர்
கூர்பரி யங்கமெ னுமேலே
சீரட ரும்பர ஞான முறுங்களி
தேவர ருந்துவர் பூமாதே.

உரை. ஆயிரம் இதழையுடைய தாமரைப்பூவிலே இருக்கின்ற மாதே, அரிய அமுதத்தினை யுடைய கடலின் நடுவே செழுமையையுடைய கற்பக தருக்கூட்டங்கள் வேலியாக, அதன் நடுவே மணிகள் நெருங்கிய ஓர் தீபம், அதன் நடுவே பருத்த அரையை யுடைய கடப்ப மரங்கள் செறிந்த வனம், அதன் நடுவே அரிய கொடையை யுடைய கிரணங்கள் பத்திபாய்கின்ற சிந்தாமணிகளால் செய்ததோர் மண்டப மாகிய வீடு, அதன் நடுவே கோரத்தை யுடைய சிவனானவன் மேற்கவித்திருக்கின்ற உனது மஞ்சம், அதன் நடுவே பரமேசுரனானவன் உனது கட்டிலென்று அதன்மேலே மேற்பட்ட ஞானத்தினால் நீ யோக நித்திரையாக இன்புறுகின்ற செறியும் மகிழ்ச்சியை அரியதவத்தையுடையவர் அனுபவிப்பர்.

குறிப்பு. இதனால் இவ்வாறு உணரப்பெறும் உவகை என்பது பெற்றாம்.

இதனுள் செல்வத்தின் உயர்ச்சியை மிகுத்துச் சொன்னமையால் உதாத்தம் என்னும் அலங்காரமும், நிரலே நிறுத்திப் பொருள் கொண்டமையால் நிரனிறை என்னும் அலங்காரமும் காண்க.

இது தேவி யோகநித்திரை கொள்ளுந் தானம் கூறியது. (அ)

## எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு
முதுகளம்விற் புருவநடு மொழிவ தாறு

ஞாலமுமென் புனலுமனற் பிழம்புங் காலும்
நாதமுறு பெருவெளியு மனமு மாக
மேலணுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பான்
மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்
தாலவிடம் பருகியதன் மகிழ்ந ரோடு
மானந்த முறும்பொருளை யறிய லாமே.

உரை. மூலாதாரமும்,மணிபூரகமும்,இலிங்கத்தானமாகிய சுவாதிட்டானமும்,மார்பிடமாகிய அனுகதமும்,பெருமையையுடைய கழுத்தாகிய விசுத்தியும், விற்போன்ற புருவ நடுவாகிய ஆக்கினையும் எனமொழியப்படுவதான ஆறுதாரமும் முறையே பூமியும் மெல்லிய புனலும் அனற்செறிவும் காற்றும் ஓசையுற்றிருக்கின்ற பெரிய ஆகாயமும் மனமுமாய் இருக்க, அப்படி யிருக்கின்ற ஆறுதாரங்களை மூலாதாரத்திலும் இருந்து பேதித்து மேற்சென்று இவற்றைப் பின்னிட்டு ஆறுதாரத்துக்கு மேலாய் இருக்கின்ற ஆயிர மிதழை யுடைய மெல்லிய கமலமாகிய சிவந்த பீடத்திலே பாம்பின் விடத்தை உண்ட தன்னுடைய கணவராகிய சதாசிவனுனவருடனே கூடி மகிழ்ச்சியைப்பெறும் பொருளாகிய குண்டலி சத்தியை அவ்விடத்திலே யோகத்தினுல் அறியலாம்.

குறிப்பு. இதனுல் அதனை அறிவதே வீடு என்பது பெற்றும்.

ஆலம் - ஆகுபெயர்.

தாமரைக்கிழங்கு போன்றிருக்கும் மூலாதாரத்தைப் பற்றிப் புழையோடு பொருந்திய இடை பிங்கலை சுழுமுனை என மூன்று நாடி எழுந்து நிற்கும். அவற்றுள் இடையும் பிங்கலையும்,நாசி யிருபக்கமாக வந்து நிற்கும்; சுழுமுனை ஆறுதாரமாகிய ஆறுகமலத்தையும் கோத்துக்கொண்டு அவற்றின் மேல் ஆயிர விதழ்க் கமலத்தை நுனியிலே கொண்டு நிற்கும். அச் சுழுமுனை நாடியினூடே அனேகங் காம்

திகளுடனே பாம்பின்வடிவாய் இருக்கின்ற குண்டலிசத்தி உடலை வளைத்து மூலாதாரத்தின் மேலே படத்தை வைத்துக்கொண்டு யோகநித்திரை செய்யும். அதனால் இம் மூன்று நாடியையும் மல மூத்திரங்கள் அன்னம் முதலானவை வாயுவைப் பூரிக்க வொட்டாமல் நெருக்காதபடிக்கு அவற்றை நீங்கச் செய்து வாயுவைப் பூரித்தால் ஒடுங்கிய நாடி தாமரை நாளம்போல நிமிரும். இப்படிச் செய்துவரும் யோகப்பயிற்சியால் அபானத் துவாரவழி காற்றுச் செல்லாமல் இடக்காற் குதியைக் குதத்தில் ஊன்றி வலக்காற் குதியை இலிங்கத்தானத்தில் ஊன்றி ஆதனமாக இருந்து இடைபிங்கலை என்னும் நாசித்துவாரம் இரண்டினுள் ஒன்றை அடைத்து ஒரு துவாரத்தால் வாயுவைப் பூரகஞ் செய்யு மளவில் அதனிடை நிரம்பி மூலாதாரத்தை முட்டிப் பின்பு மற்றநாடி வழியே செல்லும். அதுவும் நிரம்பப் பூரிக்குமளவில் அவ்வாயு மீண்டும் மூலாதாரத்தை முட்டிச் சுழுமுனை நாடி வழியே செல்லும். அதுவும் நிரம்பப்பூரித்து அவ்வாயுவைக் கும்பிக்குமளவில், சுவாதிட்டானத்தில் இருக்கின்ற அக்கினி மூண்டு சுடர்விடும். அப்பொழுது மூலாதாரத்திலே தலைவைத்துக் கொண்டு இருக்கின்ற குண்டலிசத்தி அவ் வெப்பத்தினாலே மேல் நோக்கிச் சுழுமுனை நாடியின் வழியே ஆறுதாரத்தையுங் கடந்து ஆயிரமிதழையுடைய தாமரையில் இருக்கின்ற சதாசிவனுடனே சையோகமாம், அதனால் இவ்வாறு கூறினார். இதற்குச் சகாயம் வாயுவும் அக்கினியும் ஆம்.

பூதம் ஐந்தும், தன்மாத்திரை ஐந்தும், ஞானேந்திரியம் ஐந்தும், கன்மேந்திரியம் ஐந்தும், மனமும் ஆகத் தத்துவம் இருபத்தொன்று. இவற்றோடு மாயை சுத்தவித்தை மகேசுரன் சதாசிவன் இவர்களைக் கூட்ட, இருபத்தைந்தாம். இதனுள் இருபத்தொரு தத்துவமும் மாயையுடனே பொருந்துகையினாலே, இவை பிரகிருதி என்னப்படும். மகேசுரன் எப்பாற்படுமெனில், அவனும் மாயையுடனே கூடுகையினாலே அவனையுங் கூட்டி இருபத்துமூன்று

தத்துவமும் பிரகிருதி எனவாம் மாயை யாதுடனே கூடிற்று அவ்வளவும் பிரகிருதி என்று சொல்லப்படும். இருபத்து நான்காம் தத்துவமாகிய சுத்தவித்தை இருபத்தைந்தாந் தத்துவமாகிய சதாசிவனுடன் கூடிய கூட்டம் இருபத்தாறுந் தத்துவமாம்; அதுவே பரமான்மா. 'சிவமெனும்பொருளு மாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதா மிவள்பி ரிந்திடி னியங்கு தற்குமரி தரிதெனு மறையிரைக்கும்' என்றது இது.

தனித்திருந்தால் காரியம் இல்லை, கூடியவதனுற்காரியம் உண்டு ஆனபடியினலே, சுத்தவித்தையும் சதாசிவனும் கூடிய கூட்டந் தானே ஒரு தத்துவம் எனப்பட்டது. ஆதலால் அக் குண்டலி சத்தியாகிய சுத்தவித்தை சதாசிவனுடனே புணரும் புணர்ச்சியை அறிவதே வீடாயிற்று.

குளபதம் என்பது ஆறுதாரம். மூலாதாரம்-குதத்துக்கும் இலிங்கத்துக்கும் நடு. மணிபூரகம் - உந்தியினிடம். மற்ற நாலாதாரத்தின் இடமும் இக் கவியினுலே அறியப்படும். மூலாதாரத்தைச் சொன்ன பின்பு சுவாதிட்டானத்தைச் சொல்லாது மணிபூரகத்தைச் சொல்லிப் பின்பு சுவாதிட்டானத்தைச் சொன்னது, தோன்றுங் காரிய முறைமைபற்றி.

இதனுள் நிரனிறை என்னும் அலங்காரம் காண்க.

இது குண்டலிசத்தி தான் இருக்குந் தானம் விட்டுச் செல்லுமாறு கூறியது. (க)

### அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

**தா**ளிணைக் கமல மூறித்
தருமமிழ் தூடல மூழ்க
மீளவப் பதங்கள் யாவும்
விட்டுமுற் பழைய மூலம்

வாளர வென்ன வாகம்
வளைத்துயர் பணத்தி னோடு
நாளுமைக் கயர்கண் டுஞ்சு
ஞானவா னந்த மின்னே.

உரை. சிரத்திலே ஆயிரம் இதழுடனே கூடியிருக்கும் தாமரையின் நடுவே வீற்றிருக்கின்ற ஞானமகிழ்ச்சியை யுடைய மின்போன்ற குண்டலிசத்தி, தன்னுடைய இரண்டுபாத கமலங்களிலும் உள்ளிருந்து ஊறிப் புறப்படும் அமுதம் உள்ளண்ணத்தின் வழியே நாநுனியைச் செலுத்திப் பருகுதலால் உடலிலே பரந்து எழுபத்தீராயிரம் நாடிகளையும் நனைப்ப, அதின் பின்பு கும்பித்த வாயுவை ரேசிப்ப அதனால் மீண்டு அவ்விடங்களை யெல்லாம் அடைவிலே விட்டுக் கீழ் இறங்கித் தான் முன் இருந்த பழைய மூலாதாரத்திலே ஒளியை யுடைய பாம்பென்ன உடல் வளைத்து மேற்கொண்டிருக்கின்ற படத்தையுடையதாய் நாடோறும் மையையுடைய கயல்போன்ற கண்ணினால் யோக நித்திரை செய்யா நிற்கும்.

குறிப்பு. இதனால் அப்படித் துஞ்சுஞ் சத்தியைக் காண்பதே காட்சி என்பது பெற்றாம்.

இவ்வாறு உடம்பில் அமுதம் பரக்கும்பொழுது அளவிறந்த இன்பமும் அண்டத்திலே உள்ளவையும் அனேகங் காட்சியும் பிண்டத்திலே தோன்றும்.

உலகத்தில் பாம்பு அளையிற் புகுந்தபொழுது உடல் வளைத்து உடம்பின்மேல் படத்தை வைக்கும். அது பாம்புக்கு உள்ளதொழில். அது போலக் குண்டலிசத்தியும் உடல்வளைத்து உடம்பின்மேல் படம்வைக்கும். குண்டலியுடைய மகுடூஉ வடிவையே நோக்கித் தாளிணைக்கமலம் என்றும், கயர்கண் என்றும் கூறினர்.

ஏகாரம் - ஈற்றசை.

அன்றியும், மின்னே என்பதனை விளியாக்கி மின்போன்றவளே மேற்கூறிய குண்டலிசத்தி துஞ்சும் என்று பொருள் உரைப்பினும் பொருந்தும்.

இதனுள் தன்மை என்னும் அலங்காரம் காண்க.

இது குண்டலிசத்தி தான் இருக்குந் தானத்தை மீண்டு அடையுமாறு கூறியது. (கo)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

சிவகோண முற்பகர்வ தொருநாலு சத்திநெறி
செறிகோண மத்தொடொரு மருவுகோ
ணவகோண முட்படுவ தெழுமூ விரட்டியொரு
நவில்கோண முற்றதுவும் வலயமா
யிவரா நிரைத்ததள மிருநாலு மெட்டிணையு
மெழிலாய வட்டமொடு சதுரமா
யுவமான மற்றதனி தனிமூ வகைக்கணுமெ
னுமைபாத முற்றசிறு வரைகளே.

உரை. முன்சொல்லப் படுவதாகிய சிவகோணம் நான்கும் சத்திகோணம் ஐந்தும் ஆகிய இவ்வொன்பது கோணத்தினுள்ளும் உண்டாவது நாற்பத்து முக்கோணம்; இப்படி நாற்பத்து முக்கோணமாக உற்றதுவும், அதற்குமேல் வட்டமாக எழுதி நிரைத்த எட்டிதழும், அதற்குமேல் வட்டமாக எழுதி நிரைத்த பதினறிதழும், அதற்குமேல் அழகு பொருந்திய மூன்று வட்டத்தினிடமும், அதற்குமேல் மூன்று சதுரத்தினிடமும் என்னுடைய உமை பாதம் பொருந்திய இரேகைகள்.

குறிப்பு. இதனல் இவ்விரேகைகளையுடைய சக்கரத்தைப் பூசிக்கவேண்டும் என்பது பெற்றும்.

'சத்திநெறி செறிகோண மத்தொடொரு மருவுகோண்' என்பது சத்தியினுடைய முறைமைபொருந்திய கோணம் அந் நான்கு கோணத்துடன் கூடிய ஒரு கோண மெனவாம். எனவே ஐந்து கோணம் எனவாயிற்று.

'எழுமூ விரட்டியொரு நவில் கோணம்' என்பது எழுமூவிரட்டியுடன் கூடப் புகல்கின்ற ஒருகோணம் எனவாம். எனவே நாற்பத்து முக்கோணம் எனவாயிற்று.

'வட்டமொடு சதுரமா யுவமானமற்ற தனிதனி மூவகைக்கணும்' என்பது வட்டத்துடன் சதுரமாய் ஒப்பற்ற தனிதனி மூவகையினிடமும் எனவாம். எனவே மூன்றுவட்டத்தினிடமும் மூன்று சதுரத்தினிடமும் எனவாயிற்று.

வலயமாய் என்பதனை இரண்டிடத்தும் கூட்டுக.

கோண் - விகாரம். "விண்பா லியோகெய்தி வீடுவர்" என்றார் மேலோரும்.

வலயமாய் என்பதனுள் ஆய் என்னும் வினையெச்சத்தை ஆக எனக் கொள்க. அது என்னுஞ் சுட்டுப்பெயர் விகாரத்தால் அத்து என விரிந்தது. "இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற் சுழித்தலைப் படுவேனை" என்றார் மேலோரும்.

சிவகோணம் நான்கும் கீழ்நோக்கியும் சத்திகோணம் ஐந்தும் மேல்நோக்கியும் தம்முள் புணரவே முக்கோணமும் அதனைச் சூழ்ந்த எண்கோணமும் எண்கோணத்தைச் சூழ்ந்த பதின்கோணமும் பதின்கோணத்தைச்சூழ்ந்த மற்றொரு பதின்கோணமும் அவற்றைச்சூழ்ந்த பதினாற்கோணமும் ஆக நாற்பத்துமுக்கோணம் ஆகின்றபடியினாலே, கௌளமதத்துக்குச் சிவகோணம் நான்கும் சத்திகோணம் ஐந்தும் என்பதனையேவேண்டி அவற்றால் வருங் கோணங்களைப் பதினெட்டு வன்மமும் இருபத்துநாலு சந்தியும் ஆகவே கொள்ளப்படுதலால் முற்பகர்வது என்றும், நவகோணமுட்படுவது என்றும் கூறினார்.

சமயமதத்துக்கே நாற்பத்துமுக்கோணம் என வேண்டுவது.

வன்மமாவது மூன்றிரேகை சந்தித்தது.

சந்தியாவது இரண்டிரேகை சந்தித்தது.

நான்கு புறத்தும் வாயில்விட்ட மூன்று சதுரம் இட்டு அதன் நடுவே மூன்றுவட்டம் இட்டு அதன்நடுவே சூழப் பதினறிதழ் இட்டு அதன்நடுவே சூழ எட்டிதழ் இட்டு அதன் நடுவே ஒரு வட்டம் இட்டு, அதன் நடுவே ஒன்பதிரேகை ஒன்றுக்கொன்று அளவுபெற எழுதித் துடைக்கும் இரேகைஅளவுஅறிந்து துடைக்க, துடைத்தபின் ஒன்ப திரேகையும் ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி இராகு கேது என ஒன்பது கோளின் பெயரும் முறையே பெறும். அவற்றுள் ஞாயிற்றைச் சனியுடனும் திங்களைக் கேதுவுடனும் செவ் வாயை வட்டத்துடனும் புதனை இராகுவுடனும் கேதுவைப் புதனு டனும் இராகுவை ஞாயிற்றுடனும் சனியை வட்டத்துடனும் வெள் ளியைத் திங்களுடனும் வியாழத்தைச் செவ்வாயுடனும் கூட்ட, நாற் பத்துமூன்றுகோணமாய் இருக்கும். இம்முறை எழுதுவது சங்காரக் கிரமம் எனவாம்.

ஓர் முக்கோணமும் அதற்குமேல் எண்கோணமும் அதற்குமேல் பதின்கோணமும் அதற்குமேல் மற்றொரு பதின்கோணமும் அதற்கு மேல் பதினற்கோணமும் அதற்குமேல் வட்டமும் எட்டிதழும் அத ற்குமேல் பதினறிதழும் அதற்குமேல் மூன்று வட்டமும் அதற்கு மேல் மூன்றுசதுரமும் ஆக முறையே எழுதுவது சிருட்டிக்கிரமம் எனவாம்.

விந்துவை முக்கோணத்தில் எழுதுவது கௌளமதம் என்றும், முக்கோணத்தின் கீழாக ஓர் சதுரம் இருக்கும் அதன் நடுவே விந்து வை எழுதுவது சமயமதம் என்றும் கூறுவர்.

விந்து சிவன்வடிவும், முக்கோணம் சத்திவடிவும் ஆம். இவ் வாறு எழுதிய விந்துவும் முக்கோணமும் சந்திரகண்டம் என்றும்,

எண்கோணமும் இரண்டு பத்துக்கோணமும் பதினான்குகோணமும் அக்கினிகண்டம் என்றும், அதற்குமேல் இருக்கின்ற நால்வகையும் சூரியகண்டம் என்றும் பெயர் பெறுதலின், இது திரிபுரசக்கரம் என்று சொல்லப்படும். ஆதலால் மகாதேவிக்குத் திரிபுரசுந்தரி எனப் பெயராயிற்று.

இச் சக்கரத்தின் வகைமை மேல்வரும் "பசுபதித னீதிகொண்டு" என்னுங் கவியுரையில் உணர்க.

இது தேவியிருக்குஞ் சக்கரத்தைக் கூறியது. (கக)

**கலிநிலைத்துறை.**

ஆதி சுந்தரி வடிவினை யயன்முதற் புலவோ
ரேது கண்டள விடுவது தமையிக ழிமையோர்
மாத ரிங்கிவண் மகிழ்நரோ டுறைகுவ மெனினோர்
பேதை கொங்கைகள் பெறுகுவ மெனமறு குவரால்.

**உரை.** எப்பொருட்கும் ஆதியாகிய திரிபுரசுந்தரியை நோக்கித் தம்மைத் தாங்களே இகழும் இமையோர் குலத்தில் பிறந்த மாதரானவர் இவ்விடத்திலே இருக்கின்ற இவளுடைய கணவரோடு சாயுச்சியத்தைத் தவத்தினால் அடைய யாம் பெறுவோமாயின் ஒப்பற்ற இம் மடமையுடையாள் கொங்கைகளை அணையப் பெறுகுவம் அவ்வாறன்றியிலே அணைதற்குக்கிட்டா என்று மனம் மறுகுவர். ஆதலால் அவளுடைய திருவழகை நான்முகன் நாராயணன் இந்திரன் முதலாய புலவோர் யாதுகண்டு அளவிடுவது? அதன் பெருமையை அளவிட மாட்டார்கள்.

குறிப்பு. இதனால் உணர்விற்கே யன்றிக் கண்ணிற்கும் இன்பந்தருபவள் என்பது பெற்றாம்.

அழகினால் மிக்க தெய்வமகளிரும் இவ்வாறு எண்ணிய சாமுத்திரிக லக்கணங்களினாலும் நுண்ணிய அழகினாலும் ஒளியினாலும்

உருவம் அதிசயத்தைத் தருகின்றமையால் 'எது கண்டளவிடுவது' என்றும், நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்பன மகளிருடைய நற்குணங்கள் ஆதலால் 'பேதை' என்றும் கூறினர்.

தெய்வமகளிர் யாவர்? இந்திராணி அரம்பை உருப்பசி திலோத்தமை, மேனகை, இவர்கள் முதலாயினர்.

இதனுள் பெண்வடிவிற்குப் பெண்வடிவையுடையார் ஆசைப்படுதலால் குணவதிசயம் என்னும் அலங்காரம் காண்க.

இது தேவியுடைய திருவழகை வியந்து கூறியது. (கஉ)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அறக்கிழவன் மனிதன்விர கில்லாக் கொச்சை
யழகிருந்த வூரிலிருந் தறியா னேனு
முறக்கருணை கொழிக்குமுன தமுத வாரி
யூடணுகி னவனையர மகளி ரெல்லா
நறைக்குழலுஞ் சரிந்திடவுத் தரீயஞ் சோர
நாணழிய வளைசிதற வுடுத்த வாடை
புறத்துவிழ மயலொடும்பின் றொடர்வ ரென்றாற்
பொற்கொடிநின் புதுமையெவர் புகழ வல்லார்.

உரை. ஒருவன் நெடுங்காலம் மூப்பையுடைய கிழவன், தெய்வமுமல்லன், மனிதன், அதுவுமன்றிக் காமவிரகில்லாத கொச்சையன், அதுவுமன்றி அழகிருந்த ஊரிலிருந் தறியாதவனாயினும், மிகக் கருணை கொழிக்கும் உனது அமுதவாரியினிடத்து அடைந்தால் அவனைத் தெய்வமாதரெல்லாம் கற்பகமலர் நாற்றத்தையுடைய குழலும் சரிந்திட முலைமேல் தாங்கப்பட்ட உத்தரீயம் சோர நாணம் அழியக் கையினில் அணிந்த வளைகள் கழன்று பலவிடத்தும் விழ உடுத்த ஆடை இடையைவிட்டுப் புறமே அகல மயலோடும் பின்னே தொட

ர்வரென்று ஆகமங்கள் சொல்லுமென்றால், பொன்னலாகிய கொடி போன்றவளே, நீ செய்கின்ற அதிசயமான காரியங்களை உலகத்தில் யாவர் புகழவல்லார்? ஒருவரும் புகழமாட்டார்.

குறிப்பு. இதனால் உன் கருணைக்குரியவ ராவாரே எழிலுடையார் என்பது பெற்றாம்.

'தெய்வமகளிர் மயலோடும் பின்றொடர்வர் எனவே, மானிடமகளிர் படுங் காதலைச் சொல்லமுடியாது என்பதாயிற்று.

அவனுக்கு மிகுந்த இழிவினைப் பொருத்தவேண்டிக் கொச்சையென்னும் மொழிபடக் கூறினார்.

உம்மைகள் இரண்டும் இழிவு சிறப்பு.

இதனுள் உறுப்புக்குறை விசேடம் என்னும் அலங்காரம் காண்க.

இது தேவியுடைய கருணையை வியந்து கூறியது. (௧௩)

எழுசீர்க் கழிநெடி லாசிரியவிருத்தம்.

பணைபார் புனற்கனலி வளிவான் மனத்திலறு
பதினொ லொழித்தறுமு னடைவிலே
யிணைநா லொழித்ததிரு கதிரேற வுற்றதுமு
வினைபோய தெட்டினெடு கதிர்கணு
லணையா நிரைத்ததுறு கதிர்நா லடுத்தத
னளவாயி லக்கமறு வகையினொ
னுணரா வுரைத்தகதிர் களின்மே லிருக்குமென
துணைபாத செக்கர்விரி கமலமே.

உரை. பணைத்த பாரும் புனலும் நெருப்பும் காற்றும் ஆகாயமும் மனமும் என்று சொல்லப்பட்ட இவ்வாறுதாரத்தி னிடத்து

முறையே அறுபதென்னு மெண்ணை வைத்து அவ்வெண்ணிலே நான்கு ஒழிக்கப்பட்டதாகிய ஐம்பத்தாறு கிரணமும், முன்வைத் தொழித்தபடியே அறுபதென்னுமெண்ணில் எட்டு ஒழிக்கப்பட்டதாகிய ஐம்பத்திரண்டு கிரணமும், அறுபதென்னுமெண்ணில் இரண்டு கூட்டப்பட்டதாகிய அறுபத்திரண்டு கிரணமும், அறுபதென்னுமெண்ணில் ஆறு ஒழிக்கப்பட்டதாகிய ஐம்பத்தினலு கிரணமும், அறுபதென்னுமெண்ணில் பன்னிரண்டு கூட்டப்பட்டதாகிய எழுபத்திரண்டு கிரணமும், அறுபதென்னுமெண்ணில் ஒளிமிகுந்த கிரணம் நான்கு கூட்டப்பட்டதாகிய அறுபத்தினலு கிரணமும், அதனத னளவாக இங்ஙனஞ் சொல்லிய அறுவகையினல் உணர்ந்துரைத்த கிரணங்களின் மேலாயிருக்கும் என்னுடைய உமையினது பாதமாகிய் சிவப்பையுடைய விரிந்த கமலம்.

குறிப்பு. இதனல் இப்படியிருக்கின்ற பாதாரவிந்தத்தையே தரிசிக்கவேண்டும் என்பது பெற்றும்.

'எட்டினெடு கதிர்களு லணையா நிரைத்தது' என்பது எட்டுக்கதிர்களோடு நான்கு கதிரை அணைத்து நிரைத்ததெனக் கொள்ளப்படும்.

இதனிற் போந்தபொருள்: மூலாதாரத்தில் ஐம்பத்தாறும், மணிபூரகத்தில் ஐம்பத்திரண்டும், சுவாதிட்டானத்தில் அறுபத்திரண்டும், அனகதத்தில் ஐம்பத்து நான்கும், விசுத்தியில் எழுபத்திரண்டும், ஆக்கினையில்அறுபத்து நான்குமாகிய முந்நூற்றறுபது கிரணங்களின்மேலே உமையுடைய பாதம் இருக்கும் என்பதாம்.

மூலாதாரமும், சுவாதிட்டானமும் அக்கினி கண்டம் என்றும், உருத்திரகிரந்தி என்றும் ஆம். மணிபூரகமும், அனகதமும் சூரிய கண்டம் என்றும், விட்டுணுகிரந்தி என்றும் ஆம். விசுத்தியும், ஆக்கினையும் சந்திரகண்டம் என்றும், பிரமகிர[illegible] என்றும் ஆம்.

சுவாதிட்டானத்தில் அக்கினி யிருப்பதனால் உருத்திரகிரந்தி என்றும், அனாகதத்தில் சூரியன் இருப்பதனால் விட்டுணுகிரந்தி என்றும், ஆக்கினையில் சந்திரன் இருப்பதனால் பிரமகிரந்தி என்றும் சொல்லப்பட்டன.

கிரந்தியாவன: சுழுமுனைநாடியின் மூன்றுகட்டிருக்கும். அவை: குண்டலிசத்தி இக் கட்டைக் கடக்குந்தோறும் ஒரோரவத்தையாக மூன்றவத்தையுண்டாம். இவ்வகையுடைய ஆறுதாரத்தினுள், சுவாதிட்டானத்திலே இருக்கிற அக்கினியின் சுவாலைகள் நூற்றெட்டினுள் கீழ்முகமாக மூலாதாரத்திலே ஐம்பத்தாறும் மேன்முகமாக மணிபூரகத்திலே ஐம்பத்திரண்டும் சென்றிருக்கும். அனாகதத்திலே இருக்கிற சூரியகிரணங்கள் நூற்றுப்பதினாறனுள் கீழ்முகமாக மணிபூரகத்தைக் கடந்து சுவாதிட்டானத்திலே அறுபத்திரண்டு சென்றிருக்க இதயத்தானமாகிய அவ்வனாகதத்திலே ஒழிந்த ஐம்பத்து நான்கும் இருக்கும். ஆக்கினையிலே இருக்கிற சந்திரகலைகள் நூற்றுப்பத்தாறனுள் கீழ்முகமாக விசுத்தியிலே எழுபத்திரண்டு சென்றிருக்க அவ்வாக்கினையிலே ஒழிந்த அறுபத்துநான்கும் இருக்கும். இம் முச்சுடரின் கிரணங்களை ஆறுதாரமும் அடைந்திருப்பதினால் அதனதன் கிரணமெனவாயின. ஒரு பொருளின் குணம் ஒரு பொருளினுடையதாமோவெனில், சூரியனுடைய காந்தி மேகத்தினிடத்தில் பத்திட்டாய அதனை மேகத்தினிறமென்றும் இந்திரவில்லி னிறமென்றுஞ் சொல்லப்படுதலால், ஆமென்க.

இக் கிரணங்க ளெல்லாவற்றையுங் கடந்து மேற்பட்டிருக்கிறபடியினாலே, 'கதிர்களின்மே லிருக்குமென துமைபாதம்' என்றார்.

என்னை அடிமைகொள்ளும் பாதம் என்பது பொருள், எனது என்பதுடன் உமையைக் கூட்டாமல் பாதத்தைக் கூட்டுக.

அளவாய் என்னும் வினையெச்சம் அளவாக எனவாம்.

இதனுள் நிரனிறை என்னும் அலங்காரம் காண்க.

இது சடாதாரத்தின் கிரணங்கள் மேல் தேவி பாதாரவிந்தம் இருக்கும் எனக் கூறியது. (கச)

### எஃசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

உனதுசரற் காலமதி யனைய மெய்யு
முடல்குழைத்த பிறைச்சடையுங் கரங்க ணான்கு
மனவரத முறுமபய வரத ஞான
வருட்பளிங்கு வடமொடுபுத் தகமு மாக
நினைகிலர்முன் வழுத்திலர்பின் வணங்கா ரெங்ங
னிறைத்தபசுந் தேனுமடு பாலுந் தூய
கனியுமென மதுரம்விளைந் தொழுகு பாடற்
கவிதைபொழி வதுகபிலைக் கடவுள் வாழ்வே.

**உரை.** கயிலையிலே இருக்கின்ற கடவுளுடைய செல்வமாயிருக்கின்றவளே, சரற்காலத்திலே விளங்குகின்ற மதிபோன்ற உன்னுடைய மெய்யும் உடலை யுள்வளைத்த பிறையை அணிந்த சடையும் கரங்கள் நான்கினும் நாடோறும் உற்ற அபயமும் வரதமும் ஞான வருளைத்தருகின்ற படிகமாலையும் புத்தகமும் முன்னிற்பதாக முன் மனத்தினல் நினையார், பின் வாக்கினல் வழுத்தார், அதன் பின் மெய்யினல் வணங்கார், இப்படிப்பட்டவர் நிறைத்த பசுந்தேனும் குறுகக்காய்ந்த பாலும் தூய வாழைப்பழமும் கலந்தால் ஒத்த மதுரம் விளைந்து ஒழுகும் பாடலாகிய கவிதையை நாவினல் பொழிவது எவ்வாறு? பொழியமாட்டார்.

குறிப்பு. இவ்வாறு செய்வாராயின் இப்படிப்பட்ட கவிதையை உலகமெங்கும் பொழிவர் என்பதாயிற்று.

கனியை முந்திரிகைப்பழமெனினும் பொருந்தும்.

நாலு கையினும் அபயமும் வரதமும் படிகமாலையும் புத்தகமும் ஆகத் தியானிப்பது மேல்வரும் இரண்டு கவிக்கும் ஒக்கும்.

இதற்கு வாக்குச்சித்தி தந்திரம் என்று பெயர் சொல்லப்படும்.

இது மதுரகவி பாடவேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது. (சரு)

### எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

வாரின்ப முலைமலை மடந்தைகவி நாவலர்
மனக்கமல வனம லரநீ
டேரின்ப விளவெயி றழைக்கும்ப்ர பைச்செய்ய
செவ்விநிற முணரு முரவோர்
தாரின்ப நறவொழுகு சுருளோதி யிருள்விரவு
தவளநிற வாணி கலைதேர்
பேரின்ப மதுரவலை யெறியமுத கவிதைகொடு
பேருலகை மகிழ்விப் பரே.

**உரை.** கவிகளை நாவினாற்சொல்ல வல்லாருடைய மனமாகிய கமலவனம் அலரும்படி நீண்ட தேரிலே மகிழ்ச்சியை அடைந்திருக்கின்ற இளஞாயிற்றினுடைய வெயில்போல விரிக்குங் காந்தியையுடைய கச்சினால் இன்பத்தைப் பெற்றிருக்கின்ற முலையாகிய மலையைச் சுமந்த மடந்தையின் அழகு தருகின்ற சிவந்த நிறத்தை உணரும் அறிவுடையோர்,மாலையிலே நின்று மதுரத்தை உடைய தேன் ஒழுகுகின்ற சுருண்ட குழலாகிய இருள் கலந்திருக்கின்ற வெண்மை நிறத்தையுடைய நாமகள் கூறிய கலையிலே தேர்ந்தறிகின்ற பேரின்பச் சுவையாகிய திரை எறியும் அமுத கவிதையாகிய வெள்ளத்தைக் கொண்டு பெரிய உலகத்தில் உள்ளாரை மகிழ்விப்பர்.

குறிப்பு. கமலவனம் அலரும்படி விரிக்குங் காந்தியை யுடைய மடந்தையினது சிவந்த நிறத்தை உணரும் அறிவுடையோர் எனக் கூட்டுக.

'ஓதியிருள்விரவு'என்பதற்குக் குழலிடத்து இருள்கலந்த என்று பொருளுரைப்பினும் பொருந்தும்.

'நீ பேரின்ப விளவெயில்' எனவே இளஞாயிறும், 'பேரின்ப மதுரவலை' யென்று ஏகதேச உருவகஞ் செய்தமையால் வெள்ளமும் வருவிக்கப்பட்டன.

இப்படி அருண நிறத்தை யுடையவளாகத் தியானிக்கு மளவில் பாசம் அங்குசம் கருப்புவில் பூங்கணை வரதம் அபயம் புத்தகம் படிக மாலை இவைகளினாலே விளங்குகின்ற எட்டுக் கைகளுடனே தியானிக்கவேண்டும் என்று உரைக்கும் நூலும் உள.

கவிநாவலர் வியாசர் முதலானோர். அவர்கள் பலர் ஆதலால் கமலவனம் என்றார்.

இதற்குக் காமராசகூட தந்திரம் என்று பெயர் சொல்லப்படும்.

இஃது இன்பச்சுவை பெறுங் கவிதை பாட வேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது. (கசு)

இந்துசிலை யைப்பிளந் துண்ணிறம் வகுத்தனைய
வெழில்வசனி யாதி மடவா
ரந்தவிணை நால்வர்புடை சூழமலை மங்கைதன
தருணவடி வுணர வறிவோர்
கொந்தவிழ விரிதவள மலர்மங்கை முககமல
கோலபரி மளக விதையாற்
செந்தமிழின் வடகலையின் முதுமொழிக் காவியத்
தெளிபாடல் செய்யு மவரே.

உரை. சந்திரகாந்தத்தை யுடைத்து உண்ணிறத்தை எடுத்து வகுத்தாற்போன்ற அழகு பொருந்திய வடிவையுடைய வசனியாதி

யாகிய மடவார் எண்மரும் பக்கத்திலே சூழ்ந்திருக்க மலையரையன் பெற்ற மங்கையினது அருணவுருவினை உணர அறிவோர் மணம் உள்ளிருந்து புறப்பட அலர்கின்ற வெண்மையையுடைய தாமரை மலரிலேயிருக்கின்ற வாக்கின் செல்வியுடைய முகமாகிய கமலத்திலேயிருக்கும் அழகும் பரிமளமும் உடைய கவிதையினாலே செந்தமிழினும் வடகலையினும் முதுமொழியைப் பொருந்திய காவியமாகிய தெளிந்தபாடலைச் செய்யுமவர்.

குறிப்பு. உணரவறிவோர் செய்யுமவர் எனக் கூட்டுக.

வசனிமுதல் எண்மரும் தேவியைப்போல் நாலுகையினும் அபயமும் வரதமும் படிகமாலையும் புத்தகமும் உடையவர்களாகத் தியானிக்கவேண்டிய வதனால் உணரவறிவோர் என்றார்.

தேவியையும் வசனிமுதல் எண்மரையும் பாசம் அங்குசம் கருப்புவில் பூங்கணை வரதம் அபயம் புத்தகம் படிகமாலை இவைகளினாலே விளங்குகின்ற எட்டுக் கைகளுடனே தியானிக்கவேண்டும் என்று உரைக்கும் நூலும் உள.

எண்மராவார் வசனி, காமேசுவரி, மோகினி, விமலை, அருணை, சயினி, சர்வேசுவரி, கௌளினி என இவர்கள். இவர்கள் வடிவமாய் இருக்கின்ற எழுத்தாவன ஐம்பத்தோ ரெழுத்தில் கூட்டெழுத்தாகிய கடையெழுத்தொன்றுந் தள்ளி முறையே பதினாறு ஐந்து நான்கு ஐந்து இவை. இவ்வகையை யுடைய எண்மரையும் முக்கோணத்தைச் சூழ்ந்த எண்கோணங்களினும் சூழப்பட்டிருக்கின்றவர்களாகத் தியானிக்க.

இதற்குச் சத்திகூட தந்திரம் என்று பெயர் சொல்லப்படும்.

இது காவியஞ் செய்யவேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது.

(கஎ)

உனதுநிற மெனுமிளைய கதிரிரவி வெயின்முழுகு
முலகடைய வெனநினைகுவோர்
வினைகெழுமு கொலைமறலி யனையவிழி யுருவசிமுன்
விரவுமர மகளிர் விழைவோ
ரனவரத மெனதமுது பொழிகவியு முனதருளு
மெனதுடலு முயிரு முயிர்சூழ்
மனமுமதி லுணர்வும்வரு களியுமென நினைவுருக
மலையரைய னுதவு மயிலே.

உரை. மலையரசன் பெற்ற மயில்போன்றவளே, நாடோறும் அமுதுபொழிகின்ற எனது கவியும் கவியின் பொருளாகிய உனது அருளும் எனது உடலும் உடலுட்பொருந்திய உயிரும் உயிரினல் சூழப்பட்ட மனமும் மனத்துடன்கூடிய அறிவும் அவ்வறிவுடன் கலந்த மகிழ்ச்சியும் ஆகிய இவை ஒன்றினுடன் ஒன்று எப்படிக் கலந்திருக்கின்றன அப்படியென் நினைவு பரவசப்பட்டு உருகும்படி உனது நிறமென்று சொல்லப்பட்ட கதிரை உடைய இளைய இரவியினது வெயிலிலே மூவுலகும் முழுதுமென நினைவோர், கொலைத்தொழிலோடு கூடிய மறலி யனைய விழியையுடைய உருவசி முதலாகப் பொருந்துகின்ற தெய்வமகளிரால் விரும்பப்படுவர்.

குறிப்பு. நினைவு பரவசப்பட்டு உருகும்படி நினைவோர் எனக் கூட்டுக.

தெய்வமகளிரால் விரும்பப்படுவர் எனவே மானிடமகளிரும் நாகமகளிரும் விரும்புதலைச் சொல்லமுடியாது என்பதாயிற்று.

முழுகுதல் உள்ளும் புறமும் அக் காந்தியினல் நிரம்பப்பட்டிருத்தல்.

இதற்குச் சமரிட தந்திரம் என்று பெயர் சொல்லப்படும்.

இது மகளிர்வசியம் வேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது. (கஅ)

**எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.**

ஆதி விந்துவை முகமென விணைமுலை
கீழி ரண்டதன் வடிவென வருகுதாழ்
கோத றுஞ்சுட ரெழவழ கொழுகுத்ரி
கோண மொன்றென வுனதெழி லிரதிதோய்
காத லன்கலை தமதிட நினைபவர்
காணு மங்கையர் கலைகொள லரியதோ
வோதி லிங்கிரு சுடர்முலை யனையவு
லோக மங்கையை மயல்செய்வர் கமலையே.

**உரை.** ஆயிரம் இதழைப்பொருந்திய கமலத்தை யுடையவளே, ஓர் பெண்ணினுடைய முகத்தை எப்பொருட்கும் ஆதியாய் இருக்கின்ற விந்தெனவும், அதன் கீழே யிரண்டு முலையும் அவ் விந்துவின் வடிவு இரண்டு எனவும் அவற்றின் அருகு தாழ்ந்த குற்றம் நீங்குஞ் சுடர்மேலெழ அழகு ஒழுகும் முக்கோணம் ஒன்று இருப்பது எனவும், இரதியைக் கூடுகின்ற காதலனாகிய நீகொடுத்த எழிலையுடைய மன்மதன் கலையோடு, தம்மிடத்திலே நினைபவர் தாம் காணும் மங்கையர் உடுத்த கலையைக் கொள்ளுதல் அரியதோ? தெளிந்து சொல்லின், இவ்விடத்தில் இருந்து இருசுடரும் முலைபோலப் பொருந்தப் பெற்ற உலகமாகிய மங்கையை மோகஞ் செய்வர்.

**குறிப்பு.** இவ்விடத்தில் இருந்து உலகமாகிய மங்கையை மோகஞ்செய்வர் எனவே, மூவுலகிலுள்ள மங்கையரையும் மோகஞ்செய்வரென்பதாயிற்று.

அல்குலைத் திரிகோணமாக நினையவேண்டி 'அருகுதாழ் கோதறுஞ்சுட ரெழவழ கொழுகுத்ரிகோண மொன்றென' என்றார்.

நீகொடுத்த எழிலையுடைய மன்மதனென்பது முன்கூறிய "மாயன் வணங்கி" யென்னுங் கவியுட் காண்க.

மன்மத கலையாவது காமவடிவாய் இருக்கின்ற எழுத்து, அது கிலீங்காரம், அதனை முக்கோணத்தின் நடுவே அருணவடிவாகத் தியானிக்கவேண்டும்; அன்றியும், அதனை மூவகை யிடத்தும் அருண வடிவாகத் தியானிக்க வேண்டுமென்று உரைக்கும் நூலும் உள.

இதற்கு மன்மதகலாப் பிரயோகமென்று பெயர் சொல்லப்படும்.

இது மகளிரை மோகிப்பிக்க வேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது. (கக)

ஆட லம்பிகை யிமகர சிலைவடி
வாளு நெஞ்சினுள் வழிவுறு கிரணமே
லோடி யெங்கணு முடல்பெரு கமிழ்தென
வூடெ ழும்பரபை தமதிட முணர்குவோர்
நாட வுங்கொடு விடமொரு கலுழனை
நாடும் வெங்கொலை யரவென முறியுமேன்
மூட ருஞ்சுரம் விழிபொழி யமுதினின்
மூழ்க வென்பொடு மழலுடல் குளிருமே.

உரை. ஆனந்த நிருத்தத்தை உடைய அம்பிகையினது சந்திரகாந்தம் போலும் வடிவையும் அவ் வடிவினின்றும் வழிவுறுகின்ற கிரணவழியே ஓடி உடலினின்றும் எவ்விடமும் பெருகும் அமுதமென உள்ளிருந்து இயங்கும் ஒளியையும் வேறோரிடத்து நினையாமல் தமதிடமாகத் தாம் ஆளும் நெஞ்சினுள்ளே நினைவோர் நோக்கவும், ஒருவனை மயக்குங் கொடிய விடமானது ஒப்பற்ற கருடனைக் கண்ட வெய்ய கொலைத்தொழிலையுடைய பாம்புபோல முறிந்துபோம், அதுவுமன்றி ஒருவன்மேலே மூடிக்கொண்டிருக்கின்ற அரிய சுரமானது

அவருடைய பார்வையிற் பொழியும் அமுததாரையிலே நனைக்கப்பட அச் சுரத்தா லெலும்போடு பற்றியழலும் உடல் குளிர்ச்சியை அடையும்.

குறிப்பு. பிறர்அடைந்த விடமுஞ் சுரமும் போக்குவார் எனவே அவையிரண்டுந் தம்மைவந் தடையா வென்பதாயிற்று.

•தியானிக்குமிடத்து வேறுபடாமல் தம்வயத்ததா யிருத்தலால், 'ஆளுநெஞ்சு' என்றும், சந்திரகிரணங்களைப்போல இங்ஙனம் சொல்லப்பட்ட கிரணங்கள் அமுதமயமாய் இருப்பதினால் 'உடல்பெருகமிழ்தென வூடெ ழும்பரவை' என்றும் கூறினார்.

அருஞ்சுரம் - விடுதற்கு அரியசுரம்.

உம்மைகள் இரண்டும் சிறப்பு.

ஒரும்மையைத் தசையழலுதலன்றி என்பொடும் அழலும் உடல் எனப் பொருள்தரும் எச்சமாக்கினும் அமையும்.

இதற்குக் காருடப் பிரயோகம் என்று பெயர் சொல்லப்படும்.

இது விடமும் சுரமும் தீர்க்கவேண்டினோர் தியானிக்கும் இயல்பு கூறியது. (உ0)

ஆன மின்கொடி போலுமென் முண்டக
 மாறின் மண்டல மூவகை யின்கணோர்
பானு வம்புலி தீயி னிறங்கிளர்
 பான்மை கொண்டித மாயிர கஞ்சநீள்
கானி லுன்களி ஞான முறுங்கலை
 காழ்மலங்களின் மூவகை பொன்றியே
போன சிந்தையின் மாயையொ ழிந்தவர்
 போத மின்புறு மாதியொ டந்தமே.

உரை. வேதத்தினுடைய ஆதியும் அந்தமுமாக விருக்கின்றவளே, மெல்லிய கமலங்கள் ஆறினையும் உடைய மூவகை மண்டலத்தினிடத்தும் இருக்கின்ற சூரியன் சந்திரன் அக்கினியாகிய முச்சுடரினுடைய ஒப்பற்ற நிறங்கிளக்கின்ற அழகிதாகிய மின்கொடிபோலும் பான்மைகொண்டு அவற்றின்மேலாக விருக்கும் ஆயிரமிதழை உடைய கமலமாகிய வனத்திற் சதாசிவனோடு கூடி மகிழ்ச்சியுற்றிருக்கின்ற உன்னுடைய ஞானகலையை வைரம் பற்றியிருக்கும் மூவகை மலங்களோடு கெட்டுப்போன சிந்தையினாலே மனமாயையை நீங்கினவருடைய அறிவு பேரின்பத்தை யடையும்.

குறிப்பு. இதனால் அவரே யறிவுடையோர் என்பது பெற்றாம்.

மூவகை மலம் கெடவே அவற்றுள் அடங்கிய சிந்தையும் கெட்டுப்போம். அதனாலே மனமாயை நீங்கினவர் என விசேடித்துக் கூறப்பட்டார்.

மின்கொடி மெய் நுடக்கத்துக்கு உவமை.

ஆறுதாரச் சக்கரமும் முண்டகவடிவாக இருத்தலால் முண்டகம் என ஆயின.

ஆறுதாரங்க ளிருக்கின்ற முறையே தீ பானு அம்புலி என்று கூறுமல் முறைபிறழக் கூறியது செய்யுளோசை பற்றி என்க.

அனேகம் இதழாதலால் கான் எனவும், ஆறுசமலத்துக்கும் மேலாகவிருத்தலால் நீள்கான் எனவும் சொல்லப்பட்டது.

ஓர் இந்திரவில்லுப் பல நிறமுடையதுபோலக் குண்டலிசத்தியும் பலநிறம் உடையவளாய் இருப்பள். அதனால் முச்சுடர்க்குஞ் சாந்தி உண்டாயிற்று. அப்படியிருக்கக் கண்ணுற் காணப்படுஞ் சுடராதலால், காரியத்தைக் காரணமாகக் கூறினர்.

கலை - சொரூபம்.

இது சமாதியும் நிட்டையும் உடையோர் தரிசிக்கும் இயல்பு கூறியது. (உக)

பேரு றுங்கயி லாசன் மகன்பெறு
 பேர னன்புறு பேர னெனுஞ்சொலால்
வார மன்பொடு பார்வை வழங்கென
 வாய்தி றந்திட வோடி வழங்கினைப்
வேரி முண்டகன் மான்மகு டங்களின்
 வீச ரும்ப்ரபை தீப முவந்ததாள்
சேரு நன்பெரு வாழ்வும் வழங்குவை
 தேட ருஞ்சிவ மாய மதங்கியே.

உரை. தேடுதற்கு அரிய சிவனுடைய மாய மதங்கியே, கைலாசத்தில் வீற்றிருக்கின்ற உன்னுடைய கணவரது பெயரைப் பெறுங் கைலாசனென்னும் ஒருவனுடைய மகன் பெற்ற பேரனானவன் அன்புறுகின்ற பேரன் இவன் என்று என்னை யாவருஞ் சொல்லுஞ் சொல்லினால், நமக்கும் அடியான் என்னும் வாரம்பற்றிய அன்புகொண்டு உன்னுடைய கடைக்கண் பார்வையை வழங்கு என்று யான் சொல்லும்படிக்குக் கருதி வாய்திறந்திடுமளவில் அதுகண்டு ஓடிவந்து அதனை வழங்கினாய், அஃதன்றி அச் சொல்முழுதுஞ் சொன்னால் தேன் பொருந்தியிருக்கும் தாமரையையுடைய நான்முகனும் நாராயணனும் வணங்குகின்ற மகுடங்களிலே நின்று வீசப்பட்ட அரிய காந்திகளாகிய தீபாலத்தியை உவந்த உன்னுடைய தாளிலே சேர்கிற சாயுச்சியமாகிய நல்ல பெருவாழ்வையும் கொடுப்பாய்.

குறிப்பு. 'தாள் சேரு நன்பெரு வாழ்வும் வழங்குவை' எனவே அருத்தாபத்தியால் சொன்முழுதுஞ் சொன்னால் என்பது பெறப்பட்டது.

தம்முடைய பாட்டனுடைய பாட்டன் கைலாசன் என்பது பற்றிப் பரம்பரம் அடியார்க்கும் அடியான் என்பது பொருந்த இவ்வாறு கூறினர்.

பேரன் பேரையுடையவன்; அது ஒருவன் தன்னுடைய மகனை வேறுபெயரிட்டு அழைப்பினும் தன் தந்தைபேர் இடுதற்கு உரியன் எனவாம்.

ஒடி வழங்குதல் தன்மேல் பனுவல் செய்தற்கு வாக்குக் கொடுத்தல் முதலாயின.

உம்மை - எச்சம். சிறப்பு எனினும் பொருந்தும்.

மதங்கி - மாதங்கனுடைய மகள். சங்கீதவித்தை வல்லவள் எனினும் ஆம்.

இது தேவி விரைந்து வரங்கொடுத்தல் கூறியது. (உஉ)

ஆதி சங்கரர் பாதியு டம்பினி
தாளு மம்பிகை பாதியும் விஞ்சுமோ
நீதி யன்றென நாயகர் பங்கையு
நீக வர்ந்தனை யாலவ ரெங்குளார்
சோதி செங்கதிர் மேனிநி றைந்தது
தூய கண்களு மூவகை கொங்கையோ
வீதி ரண்டுடல் கூனுமி ளம்பிறை
யேர்பொ ழிந்தது நீண்முடி யெங்குமே.

**உரை.** எப்பொருட்கும் ஆதியாகிய சங்கரருடைய பாதி உடம்பை இனிதாகக் கவர்ந்து ஆளுகின்ற அம்பிகையே, மற்றப்பாதி உடலுங் கவராமல் மிருந்திருக்குமோ, இது நீதியல்லவென்று சங்கராராகிய நாயகருடைய பாதி உடலையும் நீயே கவர்ந்தாய். அதற்குக் காரணம் சிவந்த கதிரையுடைய சோதி உன்மேனியாக நிறைந்தது, தூய்

மையையுடைய கண்களும் மூவகையே, கொங்கையும் இரண்டே, உடல்வளைந்திருக்கின்ற இளம்பிறை நீண்ட முடியெங்கும் அழகு பொழிந்தது. ஆதலால் அவர் எவ்விடத்து உளராய் இருப்பர்?

குறிப்பு. இதனால் நின்செயலை யாவராயினுங் கடக்கமாட்டார் என்பது பெற்றும்.

சங்கரர்க்கு அருணவண்ணமும் மூன்றுகண்களும் முடியில் இளம்பிறையும் உண்டு என்று சொல்லப்படும். அவற்றைத் தேவியுடையவளாய் இருத்தலின் நாயகர் பங்கையும் நீ கவர்ந்தனை யென்றார். அஃதன்றித் தேவிக்கு அருணவண்ணமும் மூன்று கண்களும் முடியில் இளம்பிறையும் உண்டு என்று சொல்லப்படும். அவற்றைச் சங்கருடையவராய் இருத்தலில், தேவியுடைய உடலை நாயகர் கவர்ந்தாரென்று சொல்லின் அமையாதோ என வினவுவாரை நோக்கிக் கொங்கை இரண்டு என வேண்டிற்று, அது கொண்டு இவளே கவர்ந்தாள் என்க.

மேனி - சொரூபம்.

ஆலும் ஒவும் அதனை அடுத்த ஈதும் இடைச்சொல். மற்றும் ஓரோகாரம் - எதிர்மறை.

உத்தர கௌளர் சத்தியில் சிவமடங்கிற்று என்று சத்தியை உபாசிப்பர்கள். அதுபற்றி இஃது அர்த்தபாகமாயிராமல் வேறிருக்குந் தேவியைச் சிறப்பித்துக் கூறியது. (உரு)

ஆதி முண்டகன் மால்சிவ னண்டர்ம
கேச னந்தச தாசிவ னைந்துபேர்
மேத குந்தொழில் போலவ னைந்தருள்
வீறு மங்கத னூறலு முண்டென
யாது மின்றியு மேனியொ டெங்கணு
மாயை தந்தது ஞானமி ரங்குமோர்

நீதி யுந்திரு வேபுரு வங்கொடு
நீசொ லிங்கித வேவல்பு ரிந்ததே.

உரை. அழகையுடையவளே, ஆதியாகிய கமலத்தையுடைய நான்முகன், திருமால், சிவன், தெய்வங்களுக்கெல்லாம் மகேசன், அந்தமாகிய சதாசிவன் என்னும் இப் பெயர்பெற்ற ஐவருடைய மேம்பாட்டுத்தகுதியைப் பெறுந்தொழில்போல முறையே உலகங்களை விதித்தருளுகின்ற வீறும், விதித்தகாலந் தொடங்கிப் பரம்பரமாக உண்டு என்று சொல்லும்படிக்கு அவ்வுலகங்கள் தழையக் காத்தலும், யாதொரு பொருளும் இல்லாமல் அழித்தலும், சீவான்மாவினுடைய சொரூபத்தையும் பரமான்மாவையும் அறியாதபடிக்கு மயக்கஞ்செய்யும் திரோபாவமும், அறிவினாற் பிரமன் முதல் நால்வர்க்கும் அனுக்கிரகிக்கும் ஒப்பற்ற நீதியும், உன்னுடைய புருவங்கொண்டு நீ சொல்லும் இங்கித ஏவலானது செய்தது.

குறிப்பு. இதனால் செய்யுந் தொழிற்கெல்லாம் நீயே காரணம் என்பது பெற்றும்.

வாய்ச்சொல்லினால் நிகழும் ஏவல்போலப் புருவநெறிப்பினாலும் நிகழும் ஏவலாகலால் 'புருவங்கொடு நீசொ லிங்கித வேவல்' என்றார்.

ஏவல் என்னும் வினைப்பெயரெழுவாய் புரிந்தது என்னும் வினைமுற்றுப் பயனிலைகொண்டு முடிந்தது.

'ஆதி முண்டகன்' என்றும், 'அந்த சதாசிவன்' என்றுங் கூறியது தொழில்பற்றி என்க.

இதனுள் நிரனிறை என்னும் அலங்காரங் காண்க.

இது தேவி புருவத்தினால் ஏவும் ஏவலை வியந்து கூறியது. ()

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

மூவ ருக்குமு தற்பி றப்புநின்
முக்கு ணக்கட லென்றுமுன்

சேவ டிக்க ணிருப்பர் சென்னிகு
வித்த செங்கை பிரிக்கிலார்
பூவெ டுத்தவர் சென்னி வைத்திடு
போத முற்றவ ரம்மைநின்
காவ லர்ப்பொதி தாளில் வைக்கவு
மூவர் சென்னி களிக்குமே.

உரை. தாயே, தாங்களாகிய அயன் அரி அரன் என்னும் மூவர்க்கும் முதற்பிறப்பையுடைய காரணம் உன்னுடைய முக்குணமாகிய கடல் என்று உனக்கு முன்னாகச் சேவடியின்கீழே முடிமேற் குவித்த சிவந்தகைகளைப் பிரியாதவர்களாய் இருப்பர், ஆதலால் பூவினை எடுத்துத் தனித்தனி மூவர்முடிமேல் வைத்து அருச்சனை செய்யும் அறிவுடையோரானவர் அதனை விட்டுப் பாரிசாத வனத்தில் உள்ள அலரினால் பொதியப்பட்ட உன்னுடைய தாளில் பூவினைவைத்து அருச்சனை செய்ய, அம்மூவர் முடியும் இன்பத்தை அடையும்.

குறிப்பு. இதனால் உன்னைப் பூசிப்பதன்றிப் பின்னும் ஓர் தெய்வத்தைப் பூசிக்கவேண்டாம் என்பது பெற்றாம்.

'மூவர் சென்னி களிக்கும்' எனவே மூவரால் தரப்படும் வரத்தையும் தேவியால் தரப்படும் வரத்தையும் தேவியுடைய பாதத்தில் அருச்சிப்போர் பெறுவர் எனல் ஆயிற்று.

பிறப்பு என்பது பிறக்குங் காரணத்தை உணர்த்தினமையின் ஆகு பெயர்.

முக்குணமாவன இராசதம், தாமதம், சாத்துவிகம் என இவை. இராசதம் சிவப்பு; அதனால் தோன்றினான் அயன். தாமதம் கறுப்பு; அதனால் தோன்றினான் அரன். அவன் பிரளய கால ருத்திரன். சாத்துவிகம் வெளுப்பு; அதனால் தோன்றினான் அரி. அவன் வைகுண்ட

வாசி. இவ்வாறன்றிச் சாத்துவிகத்தில் உண்டானான் அரன், தாமதத்தில் உண்டானான் அரி என்டாநம் உளர்.

தேவி மாணிக்கமயமாப் விளங்குகின்ற கட்டிலின்மேல் இருக்கும்பொழுது சாம்பூனத மென்னும் பொன்னால் மும்மூர்த்திகளும் மூன்று காலாகத் தாங்கும்படி செய்த முக்காற் பீடம் எடுத்து வந்து தெய்வ மகளிரானவர் பாதந்தாங்க வைப்பர். அதனால், 'முன் சேவடிக்க ணிருப்பர்' என்றார்.

இதனுள் உதாத்தம் என்னும் அலங்காரம் தோன்றுகின்றது.

இது தேவியுடைய பாதபூசையின் சிறப்பினைக் கூறியது.(உ௫)

வேத ரஞ்சகன் மால்புரந்தரன்
வேக சண்டதபேரனோ
டாதி யெண்டிசை பாலர் பொன்றவு
மாதி யந்தமி லாததோர்
நாதர் பொன்றில ரேதுன் மங்கல
நாணு றுந்திற மாதலா
னீத மைந்தது போக மம்பிகை
நீலி யென்பது பாவமே.

உரை. அம்பிகையே, வேதத்தை யிரஞ்சிக்கச் செய்பவனாகிய நான்முகன், திருமால் என்னும் இவர்களும், அல்லாமல் புரந்தரன், கடுப்பை உடைய இயமன், குபேரனோடு இவர்களாதியாகிய எண்திக்கு பாலரும் மகாபிரளயங் கற்ப முதலாகிய காலங்களில் இறந்துபோகவும் தோற்றமும் முடிவும் தமக்கில்லாதனவாக நாதர் இறந்திலர். அதற்குக் காரணம் யாது? உன்னுடைய கழுத்தின் மங்கல நாண் நீங்காமல் உறப்பெறுந் திறனே. ஆதலால், நீ அவர்க்கு வதுவை செய்யப்படுங் கூட்டமே கூட்டம். அப்படியிருக்க, உன்னை உலகத்தார் நீலி யென்று சொல்லுவது பாவமாக இருந்தது.

குறிப்பு. இதனால் உனக்கு ஆட்பட்டவர்க்கு இடையூறு இல்லையென்பது பெற்றாம்.

'உன்மங்கல நாணுறுந்திறன்' எனவே உனக்கு நாசம் இல்லை என்றவாறாயிற்று.

"வினைமுற் றேவினை யெச்ச மாகலுங்
குறிப்புமுற் றீரெச்ச மாகலு முளவே."

என்பது கொண்டு இலாதது என்னும் எதிர்மறை வினைக்குறிப்பு முற்றை வினை யெச்சமாகக் கொள்க.

"ஆதியந்தமிலர்மலோர் நாதர்' என்று பாடம் ஓதுவாரும் உளர்.

நீலியென்பது நீலநிறத்தை உடையவளுக்கும் மனத்தின்கண் வைரத்தை உடையவளுக்கும் பெயராதலால், வைரம் உத்தமிக்குப் பொருந்தாது என்பதுபற்றி 'நீலியென்பது பாவமே' என்றார்.

ஓர் - அசை.

இதனுள், நாதர் பொன்றாதிருத்தற்கு மங்கல நாணுறுந்திறனே காரணமென ஏது எடுத்து உரைத்தமையால், ஏது என்னும் அலங்காரங் காண்க.

இது தேவியுடைய மங்கல நாண் சிறப்புக் கூறியது. (உசு)

மொழிவ துன்செப முத்திரை பாணியின்
முயல்வ தெங்கு நடப்பன கோயில்சூழ்
தொழில ருந்துவ முற்றுமு னுகுதி
துயில்வ ணங்கல் களிப்பன யாவுநீ
யொழிவ றுங்களி யென்செயல் யாவையு
முனது நன்செய் பரிச்செய லாகவே
யழிவ றும்பதம் வைத்தருள் பேரொளி
யளிவி ளைந்து களிப்பெழு நாதமே.

உரை. பெரிய ஒளியை யுடைய கருணை விளையப்பட்டு உவகை மிகுந்த நாதமாய் இருக்கின்றவளே, யான் வாயினுல் சொல்லுஞ் சொல்லெல்லாம் உன்னுடைய மந்திரமாகவும், யான் கையினுல் செய் யுந்தொழில் எல்லாம் உன்னுடைய முத்திரையாகவும், யான் எவ்வி டத்தும் நடக்குந் தொழிலெல்லாம் உன்னுடைய கோயில் வலம்வருந் தொழிலாகவும், யான் உண்பனவெல்லாம் உனக்குச் செய்யும் ஆகுதி யாகவும், யான் துயிலுந் துயிலெல்லாம் உன்னை முடியினுல் வணங்கும் வணக்கமாகவும், யான் யாதொன்றினுல் மகிழ்வனவெல்லாம் நீ யென் நெஞ்சைவிட்டு நீங்காமையினுல் உண்டாகிய மகிழ்ச்சியாகவும், இங் ஙனஞ்சொல்லப்பட்ட தொழிலன்றிச்செய்யும் என்னுடைய தொழில் யாவையும் உன்னுடைய நல்ல பூசைக்கு உரிய செயலாகவும், சேர் ந்த அடியார் இறுதல் ஒழிதற்குக் காரணமாகிய உன்னுடைய பாதங் களை என் தலைமேல் வைத்தருள்.

குறிப்பு. உதரமே குண்டமும் உதராக்கினியே ஓமாக்கினியும் எனக் கருதி 'அருந்துவ முற்றுமு ளுகுதி' யென்ருர்.

ஏகாரம் தேற்றம் ; செய்யுளீற்றினன்றி மொழியீற்றினும் வரும் ஆதலால் ஈற்றசை யெனினும் அமையும்.

முத்திரை நவமுத்திரை. அவையாவன : சங்ஹோபம், திராவ ணம், வசியம், உன்மாதம், மகாங்குசம், கேசரி, பீசம், யோனி, திரி கண்டம் என இவை.

இதனுள் ஆர்வந் தோன்ற உரைத்தமையால், ஆர்வமொழி என் னும் அலங்காரங் காண்க. உருவக வலங்காரமும் பொருந்தி வந்தது.

இது தேவியைப் பார்த்து என்னை அளித்தல் வேண்டும் எனக் கூறியது. (உஎ)

கலிநிலைத்துறை.

பிரம னிந்திரன் முற்பிற தேவர்க ளுணெலா
நரைபெ ருந்திரை யற்றநல் லாரமு தேகொலா

மொருவர் தங்கிலர் நின்சிவ னூண்விடம் வாழ்வன்மா
திருபெ ருங்குழை யிட்டபொன் னோலைபின் வாசியே.

உரை. மாதே, பிரமன் இந்திரன் முதலியவர்களும் இவரல்லாத பிற தேவர்களும் உண்ணும் உணவெல்லாம் நரையும் பெரிய திரையும் போக்குதற்குக் காரணமாகிய நல்ல அரிய அமுதமேயாம். அப்படியிருந்தும் இவர்களுள் ஒருவராயினும் இறவாமல் இருந்தவர்களில்லை உன்னுடைய கணவனாகிய சிவன் உண்ட உணவு விடமாயிருந்தும் ஒருகாலும் இறவாமல் வாழ்வான். அதற்குக் காரணம் உன்னுடைய இரண்டு பெரிய காதிலும் இட்ட பொன்னோலையின் நன்மையே.

குறிப்பு. இதனாலும் உனக்கு ஆட்பட்டவர்க்கு இடையூறு இல்லை யென்பது பெற்றாம்.

நாசம் இல்லை யென்பது இது கொண்டும் அறியப்பட்டது.

கணவனை யிழந்தோர் காதணி வாங்கப்படுவர்; அதனால் இவளுடைய காதணி வாங்கப்படுவ தன்மையின், அதனைக் காரணமாக்கிச் சிவன் இறவாமல் இருத்தலைக் காரியமாகக் கூறினார்.

ஓலைச் சுருள் போன்றிருத்தலால், பொன்னோலை யெனப்பட்டது.

பெருமை யிரண்டினுள் முன்னது மிகுதி பற்றியும், பின்னது வளர்ச்சி பற்றியும் வந்தன.

ஆரமுது - கிடைத்தற்கு அரிய அமுது.

ஏகாரங்க ளிரண்டும் தேற்றம்.

கொல் - அசை.

இதனுள் ஏது என்னும் அலங்காரங் காண்க.

இது தேவியுடைய தோட்டின் சிறப்பினைக் கூறியது. (உஅ)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

முதுமறைசொ லிளவனிதை யயனொடரி குலிசனுனை
முறைபணியு நெறியி னிடையே
பதறியுன தருதவரு மரனையெதிர் கொளவுனது
பரிசனமு னடிவ ளமையா
லிதுபிரமன் மகுடமரி மகுடமிது குலிசன்முடி
யிதுகடின மிடறு மிருதாள்
சதியமர வமரவழி விலகிவர வரவெமது
கடவுளெனு மொழித ழைகவே.

உரை. பழைய மறைகள் புகழ்கின்ற எக்காலமும் இளமையோடு கூடிய வனிதையே, அயனும், அரியும், குலிசமென்னும் ஆயுதத்தை யுடைய இந்திரனும் விதிவழுவாமல் உன்னெதிர் பணிந்து கிடக்கும் வழியின் நடுவாகக் காதலினால் உன் இல்லத்தை நோக்கிவரும் அரனைவிரைந்து நீ யெதிர்கொள்ள. உன்னுடைய அடியின் வளமையால் இது பிரமனுடைய மகுடம், இது அரியினுடைய மகுடம், இது குலிசனுடைய மகுடம், இம் மகுடங்கள் கடினம், அதனால் இருதாள் இடறும், விரைந்து நடக்குங் கதி அமர்க, அமர்க, இடறாமல் வழி விலகி வருக, வருக, எம்முடைய தெய்வமே யென்று உன்னுடைய ஏவல் செய்தற்கு உரிய தெய்வ மகளிர் சொல்லும் மொழிகளானவை வளர்க.

குறிப்பு. இதனால் அம் மொழிகள் என் செவிப்படச் செய்தபாவ மெல்லாம் நீங்கும் என்பது பெற்றாம்.

"வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய" என்பது கொண்டு அமர அமர வர வர என்னும் வினையெச்சங்களை வியங்கோண் முற்றாகக் கொள்க.

கணவனைக் கண்டால் விரைந் தெழுந்து வருதல் உத்தமிக்கு இயல்பாதலால், 'பதறி யெதிர்கொள' என்றும், சிவப்பும், அழகும், மேன்மையும் உடைய அடியாகலால், 'உனடிவ ளமையால்' என்றும் கூறினர்.

முறை பணிதல் - அட்டாங்கம் பஞ்சாங்கம் என்னும் விதிப்படி பணிதல்.

இதனுள் உதாத்தம் என்னும் அலங்காரங் காண்க.

இது ஏவல் செய்வோர் சொல்லும் மங்கல மொழியை எடுத்துக் கூறியது. (உக)

பசுபதித னீதிகொண் டறுபத்து நாலுபல
கலைஞான முங்கரு ணையால்
வசிவற நெடும்புவன மாயையின் மயக்கியதன்
வழிவரு பெரும்ப யனெலா
மிசைபெற விளைத்ததும் பின்னுமுன தேவலா
லிணையிலுன தாக மமெலாம்
விசைபெற விளைத்தெவையு மிதுதர வளித்ததுவும்
விமலையுன துரிமை யலவோ.

உரை. உள்ளும் புறமும் அழுக்கின்மையை யுடையவளே, பசுபதியானவன் தன்னுடைய புத்திகொண்டு அறுபத்து நான்காகிய பல கலைஞானத்தையும் வடுவற நெடிய புவனத்தின்கண் தனது கருணையினால் மாயைகொண்டு விரவச்செய்து இக் கலையினிடமாக வரும் பெரிய பயன்களெல்லாம் புகழ்பெறும்படி செய்ததும், அதுவுமன்றிப் பின்னும் உன்னுடைய ஏவலினால் அவ்வறுபத்து நான்கு கலையினிடமாக வரும் பயன்களெல்லாம் விரைவில் பெறும்படி ஒப்பில்லாத உனது கலையை உண்டாக்கி அப் பயன்களுமன்றி எவ் வகைப்பட்ட

பயனையும் இக் கலைதானே தரக்கொடுத்ததும், உன்னை அப் பசுபதி யானவன் மனைவியாகப் பெற்ற உரிமையினால் அல்லவோ?

**குறிப்பு.** இதனால் உன்னையன்றி ஓர் சித்தி பெறுவதில்லை என்பது பெற்றாம்.

எல்லாம் என்பது அறுபத்து நான்கு கலையினிடமாக வரும் பயனெல்லாம் என நின்றது.

பசுபதியினுடைய அனுக்கிரகம் மாயைக்குக் காரணம், மாயை கலைகளை விரவச்செய்தற்குக்காரணம், அதனால் 'கருணையால் வசிவற நெடும்புவன மாயையின் மயக்கி' என்றும், அறுபத்து நான்கு கலையினால் வரும்பயன் இம்மைக்கன்றி மறுமைக்கில்லை, இஃது இம்மைக்கும் மறுமைக்கும் பயன் தருதலால், 'இணையிலுன தாக மமெலாம் விசைபெற விளைத்தெவையு மிதுதர வளித்ததுவும்' என்றும் கூறினார்,

வசிவு - வடு. "வசிந்து வாங்கு நிமிர்தோள்" என்றார் பிறரும்.

ஓகாரம் - எதிர்மறை.

அறுபத்து நான்கு கலைகளாவன மாயா சம்பிரதம், தத்துவ சம்பிரதம், யோகினி சாலம், மாலினி வித்தை, மகா சம்மோகனம், மனோபேதம், தந்திர பேதம், குய்ய தந்திரம், கலா வாதம், கலா சாரம், குண்டிகா மதம், அஞ்சன வித்தை, பாதுகை, பான பாத்திரம், பரகாய பிரவேசம், இரச வாதம், இவை முதலாயின. இவற்றுள், மாயா சம்பிரதம் - ஓரிடத்தி லூர்போல வனம்போல மலைபோல நதிபோலத் தோற்றுவித்தல். தத்துவசம்பிரதம்-ஒரு பூதத்தில் ஒரு பூதம் தோற்றுவித்தல். இதனை மகேந்திர சாலமென்றுஞ் சொல்வர். யோகினி சாலம் - மயானத்தில் உபாசித்து யோகினிகளைக் காண்பிப்பது, மாலினி வித்தை-சமுத்திரங் கடக்கச் செய்வது. மகா சம்மோகனம்-விழித்திருக்கின்றவர்களை மெய்ம்மறந்து நித்திரை கொள்ளச் செய்வது. மனோ பேதம்-மனத்தைப் பேதிக்கச் செய்வது. தந்திர பேதம்-

ஓரிடத்தும் வெளிப்படாத மந்திரத்தை வெளிப்படச் செய்வது. குய்ய தந்திரம் - வெளிப்பட்டதை மறைப்பிப்பது. கலா வாதம் - மன்மத வித்தை. கலா சாரம் - வருணத்தை அதிகப்படுத்துவது. குண்டிகா மதம் குளிகையினலே இளமை அடைவது. அஞ்சன வித்தை-மறை பட்ட பொருளைக் காண்பிப்பது. பாதுகை - செருப்பைத் தொட்டு நினைக்கில் நினைத்த இடத்தில் விடுவது. பான பாத்திரம் - ஒரு கா கத்தில் நினைத்த பானமெல்லாம் தருவது. பரகாயப் பிரவேசம் - பிராணனில்லாத உடம்பிலே புகுவது. இரச வாதம்-உலோகத்தை பேதிக்கச் செய்வது. இவ்வாறே அறுபத்துநான்கு கலைகளையும் அறிக.

ஆகமமாவது ஸ்ரீவித்தை. அது மந்திரமும் சக்கரமும் என இரு வகைப்படும். மந்திரம் இனிமேல் வருங் கவியுட்காண்க. சக்கரம் முன் "சிவகோண" மென்னுங் கவியுட் கூறினர்.

அஃது அர்ச்சனை செய்யும் முறைமையாவன மேருப் பிரத்தாரம் கைலாயப் பிரத்தாரம் பூப்பிரத்தாரம் என மூவகையாம். சோடச நித்த தேவதைகள் தாமே சக்கரத்தினுடைய அங்கமாக வியாபித்திருப்பது மேருப் பிரத்தார மென்று வசிட்ட சங்கிதையிலே தேவியை நோக்கிச் சிவனலே சொல்லப்பட்டிருக்கின்றது.

சோடச நித்த தேவதைகள் அக்கர உருவமாக இருப்பதனல் அவ்வக்கரங்கள் தாமே சக்கரத்தினுடைய அங்கமாக வியாபித்திருப்பது கைலாசப் பிரத்தாரமென்று சனந்த சங்கிதையிலே இருடிகளை நோக்கிச் சனந்தாலே சொல்லப்பட்டிருக்கின்றது.

வசனி முதல் எண்மரும், நித்த தேவதைகள் பதினறவரும், யோகினிகள் பன்னிருவரும், ஆகருஷணிகள் நால்வரும் பாசமும், அங்குசமுமென்று சொல்லப்படும் தேவதைகள் சக்கரத்தினுடைய அங்கமாக வியாபித்திருப்பது பூப் பிரத்தாரமென்று சனற்குமார சங்கிதையிலே சனற்குமாரராற் சொல்லப்பட்டிருக்கின்றது.

வசனி முதல் எண்மரும் முன் கூறப்பட்டனர்.

நித்த தேவதைகள் பதினறுவராவார் திரிபுரசுந்தரி, காமேசுவரி, நித்தியாநித்தியை, பகமாலினி, நித்தியக்கிலின்ன, பேருண்டை, வன்னிவாசினி, மகாவித்தியேசுவரி, ரௌத்திரி, த்வரிதை, குளசுந்தரி, நித்தியானிலபதாகை, விசயை, சர்வமங்களை, சுவாலாமாலினிகை, சித்திரை என இவர்கள்.

யோகினிகள் பன்னிருவராவார் வித்தியாயோகினி, ரேசிகா யோகினி, மோசிகா யோகினி, அமிர்தா யோகினி, தீபிகா யோகினி, விஞ்ஞான யோகினி, ஆப்பியா யோகினி, வியாப்பினி யோகினி, மேயா யோகினி வியோமரூபா யோகினி, சித்தரூபா யோகினி, இலட்சுமி யோகினி என இவர்கள்.

ஆகருஷணிகள் நால்வராவார் கந்தாகருஷணி, ரூபாகருஷணி, ரசாகருஷணி, பரிசாகருஷணி என இவர்கள்.

உருத்திரயாமளம் என்னும் நூலினுள் இச் சக்கரம் தேவர், கந்தருவர், இயக்கர், இராக்கதர், அசுரர் இவர்களாலே உபாசிக்கப்பட்டதென்றும், நான்கு வருணத்துக்கும் நான்காசிரமத்துக்கும் உபாசிக்கத் தகுமென்றும், உபாசிக்கில் வாழ்நாளும், புகழும் நன்மக்களும், செல்வமும், வசியமும், சுவர்க்கமும் என இவை முதலாயின நன்மைகளைத் தருமென்றும் கூறப்பட்டிருக்கின்றது. இவற்றின் விரிவெல்லாம் அந் நூலிற் காண்க.

இது தேவியினுடைய வித்தை வந்தவாறு கூறியது. (௩௦)

அரியதா குஞ்சிவஞ் சத்திமத னவனிபின்
பாதித்தன் மதிம தனவேள்
பெருகுவா னிந்திரன் பின்புபரை மதனன்மால்
பேசின்முக் கண்ட மடைவே

யுரியதா மந்தத்தின் மாயையும் முறையமைத்
துறுமெழுத் தடைய வுணர்வாற்
றெரியினு மத்தினொடு மூனதுறுய் பாமென்று
செப்புநான் மறைக ளுமையே.

**உரை.** உமையே, அரிய பொருளாய் இருக்கின்ற சிவத்தினு டைய எழுத்தும், சத்தியினுடைய எழுத்தும், மன்மதனுடைய எழு த்தும், பூமியினுடைய எழுத்தும், பின்பு சூரியனுடைய எழுத்தும், சந்திரனுடைய எழுத்தும், காமனுடைய எழுத்தும், ஆகாயத்தினு டைய எழுத்தும், இந்திரனுடைய எழுத்தும், பின்பு பாராசத்தியி னுடைய எழுத்தும், காமனுடைய எழுத்தும், திருமாலுடைய எழுத் தும் ஆகிய இவற்றை விளங்க உரைப்பின், இங்ஙனங்கூறிய மூன்று கண்டமும் உரியதாகப் பெறும் இறுதியின்கண் அடைவே மாயையி னுடைய எழுத்தொன்றையும் மும்முறையாக அமைத்து இப்படிப் பதினைந்தாகப் பொருந்துகின்ற எழுத்துக்கள் அடைய உணர்வினால் தெரியுமிடத்து உன்னுடைய நாமத்துடன் அங்கமாய் இருக்கும் என்று நான்கு வேதங்களும் செப்புகின்றன.

குறிப்பு. இதனால் இம் மூல மந்திரங்கொண்டு அரிய பலன்க ளைப் பெறலாம் என்பது பெற்றும்.

எழுத்தென்பதனை எல்லாவற்றோடும் கூட்டுக.

கண்டங்களை அறியும்படிக்குப் பின்பு பின்பு என்றார்.

கடைக்கண்டம் மூன்றெழுத்தும், முதற்கண்டம் நான்கெழுத் தும், இடைக்கண்டம் ஐந்தெழுத்துமாகக் கண்டந்தோறும் இறுதி யின் மாயையி னெழுத்தைப் பொருந்தி இருப்பதனால் தேவிக்குப் பஞ்சதசாக்ஷரி என்னும் பெயர் பொருந்திற்று.

முதற் கண்டத்தும் கடைக்கண்டத்தும் சத்தியின் எழுத்தும், மூன்றுகண்டத்தும் காமன் எழுத்தும் வருதல் பயன் கருதிய முறைமை.

இம் மந்திரத்தினுடைய மூன்று கண்டங்களானவை முச் சுடரும் முச் சத்தியும் மூன் றவத்தையும் முக் குணமுமா யிருக்கும், இதன் விரிவெல்லாம் உபதேச முறைமையால் உணர்க.

இது தேவியினுடைய மூலமந்திரங் கூறியது. (௩௧)

மோக போக விழைவி னுருன்
மூல வித்தை தன்னின்முன்
னுக மாரன் யோனி பொன்ன
ணங்க மைத்து நெய்யினல்
யோக மார்சி வத்த ழற்கு
ளோம முற்று விமலையே
த்யாக மாம ணிக்கொ டக்க
வலய முட்செ விப்பரே.

உரை. விமலையே, மோகத்தைச் செய்யும் போகங்களை விரும்பினோர் மேற்கூறிய உன்னுடைய மூலமந்திரத் தாதியிலே மாரனுடைய எழுத்தும், சத்தியினுடைய எழுத்தும், திருமகளுடைய எழுத்தும் முறையே அமைத்து இப் பதினெட்டு அக்கரமாக நின்ற மந்திரத்தைச் சமித்து மக்கள் முதலிய எல்லாங்கூடி நிறைந்த சிவரூபமாய் இருக்கின்ற அக்கினியிலே காமதேனுவினுடைய நெய்யினல் ஓமஞ்செய்து தியாகத்தை யுடைய பெரிய சிந்தாமணிகளைக் கைக்கொண்டு அக்க வலயமாக அதனுட் செவிப்பர்.

குறிப்பு. மந்திரத்தைச் செவிப்பர் எனக் கூட்டுக.

போகம் - சுவர்க்காதி போகம்.

செபமாலை சிந்தாமணியெனச் சொல்லவே, நெய் காமதேனுவினுடையதென்பது வருவிக்கப்பட்டது.

சிந்தாமணியும் காமதேனுவினுடைய நெய்யும் கிடைத்தற்கு உரியர் அல்லாதார் தாமரைமணியும் பசுவினெய்யும் கொள்வர்.

தாமரை மணியிற் செபித்தால் இச்சித்த தெல்லாம் கொடுக்கு மென்று நூல்களிற் சொல்லப்படுகையால், பொதுப்படத் தியாகமா மணி என்றார்.

இது முன் கூறிய மந்திரத்தினுடன் எழுத்துக்கள் கூட்டிச் செபிக்கும் முறைமை கூறியது. (கூஉ)

இருசுடர் முலைத்துணைச் சிவன்வடிவு நீயதனை
யானுநவ மாக நினைவே
னுருவுநிறை தன்னிலள வொத்தபர மானந்த
முடையபர வெருடுப ரையுமாய்
மருவுமினி தாமுங்கள் கூட்டமது சேடமு
மறுத்ததனை யுடைய துவுமா
யருகிலிரு வர்க்குமொரு பொதுவாகி நிற்குங்கொ
லழிவற்ற ஞான முதலே.

உரை. அழிவில்லாத ஞானவொளியா யிருப்பவளே, சந்திர சூரியரென்னும் இரண்டு சுடராகிய இரண்டு முலையையுடைய நீ சிவன் வடிவுதானே. அச் சிவன் வடிவினை ஒன்பது கூறுபாடாக யானும் நினைவேன். ஆகலால், இவ்விருவருடைய வடிவும் நிறுத்தாலும் நிறை தன்னில் அளவொத்த பரமானந்தத்தை யுடைய பராசத்தியாகி இனிதாக மருவும் உங்கள் கூட்டமானது சேடமுமாய் அதனை மறுத்து அச் சேடத்தை யுடையதுவுமாய் இருவருக்கும் அருகில் ஒரு பொதுவாகி நிற்கும்.

குறிப்பு. இதனால் நீயே மெய்ப்பொருள் என்பது பெற்றும்.

அளவொத்த கூட்டம் எனக் கூட்டுக.

கூட்டமென்னுந் தொழிற்பெய ரெழுவாய் நிற்கும் என்னும் வினை முற்றுப் பயனிலைகொண்டு முடிந்தது.

'இருசுடர் மூலத்துணை நீ' எனவே புவன ரூபமெல்லாஞ் சத்தி ரூபமெனவும், 'அதனை யானும் நவமாக நினைவேன்' எனவே மீண்டும் அப் புவன ரூபமெல்லாம் சிவ ரூப மெனவும் ஆகலால், சத்தி ரூபமே சிவரூபம் சிவரூபமே சத்திரூப மெனவாயிற்று. சத்தி சிவன் வடிவென்னுங்கால், சத்தியானவள் சேடமாகவும் சிவனானவன் சேடத்தை யுடையவனாகவும் சொல்லப்படும் சிவன் சத்தி வடிவென்னுங் கால், சிவனானவன் சேடமாகவும் சத்தியானவள் சேடத்தை யுடைய வளாகவும் சொல்லப்படும். அதனால் இருவருடைய கூட்டமும் இருவர்க்கும் பொதுவாகலால், 'உங்கள் கூட்டமது சேடமு மறுத்ததனை யுடைய துவுமா யருகிவிரு வர்க்குமொரு பொதுவாய் நிற்கும்' என்றார்.

சிவன் ஒன்பது வடிவாய் இருப்பன் என்பதனை அறிவில்லாத யானும் நினைவேன் எனப் பொருள் உரைக்கின்றமையால், உம்மை - இழிவு சிறப்பு.

நவம் - நவவியூகம். அவை முன் கூறப்பட்டன.

அது என்றது பகுதிப்பொருள் விகுதி.

ஆறும் கொல்லும் அசைநிலை.

இது சத்தி வடிவும் சிவன் வடிவும் ஒன்றெனக் கூறியது. (கூ௩)

மனமுநீ வெளியுநீ வளியுநீ கனலுநீ
மறிபுனலு நீபு வியுநீ
நினையினீ பரமற வளர்ந்தொளி பரந்துவிடி
னீயன்றி யொன்று முளதோ
வுனதுமா ஞானவா னந்தவுரு வைப்புவன
வுருவென வகுத்த ருளவோ
வனையுமாய் மகவுமா மாறுபோ னீசத்தி
யருணவடி வாய துமையே.

உரை. உமையே, மனமும் நீ, ஆகாயமும் நீ, வாயுவும் நீ, கனலும் நீ, அறியப்பட்ட புனலும் நீ, பூமியும் நீ, தெளிய நினையுமிடத்து நீ மேலறவளர்ந்து ஒளியாக எங்கும் பரந்துவிடின் நின்னையன்றி ஒர் பொருளு முளதோ? இப்படி இருக்கின்ற உன்னுடைய பேரறிவின் பத்தையுடைய உருவைப் பின்பு புவன ரூபமாக வகுத்து வேறுபட் டிருப்பதாக நீ தருவதற்கோ அன்னையுமாய் மகவுமா மாறுபோல நீ அருண வண்ணத்தையுடைய சத்திவடிவாகியது?

குறிப்பு. இதனால் உன்னை ஒழிந்து வேறொரு பொருளில்லை என்பது பெற்றாம்.

இம் முறை கூறியது தோற்ற முறைமை கருதி.

தேவி தன்னுடைய உருவத்தை அறுவகைப்பட் டிருக்கின்ற புவன ரூபமாக வகுத்து வேறுபடுத்துத் தருதலாலும், அப் புவனம் இவளாய் இருத்தலாலும், 'அனையுமாய் மகவுமா மாறுபோல்' என்றார்.

ஒகாரங்கள் இரண்டினுள், ஒன்று எதிர்மறை, ஒன்று வினா.

இதனுள் உண்மைப் பொருளைப் பிறிதுபொருளாக உரைத்தமையால், பொருளவநுதி என்னும் அலங்காரங் காண்க.

"நிலனும் விசும்பா நிமிர்காலாந் தீயா
மலர்சுதிராம் வானோர் மதியா - மலர்கொன்றை
யொண்ணறுந் தாரா னொருவ னுயிர்க்குயிரா
மெண்ணிறந்தா னெப்பொருளு மாம்."

இஃது அவ்வலங்காரத்துக்குப் பிறர் காட்டிய பாட்டு.

இது முன் கூறிய கவியில் 'இருசுடர் மூலத்துணை நீ' எனக் குறிப்பினாற் கூறியவதனை வெளிப்படுத்திக் கூறியது. (௩௪)

அருளுமுன தாக்கினைத் திகிரிக்கு ளுட்பட்
டருக்கன்மதி யனைய வடிவாய்ப்

பருவமுதிர் பரசின் மயத்தொடுறு பான்மையாம்
பரமசிவ னைப்ப ணிகுவர்
மொருபொழுதி லிப்பரம சிவனையெழு கதிர்மதிய
வொளிகடந் தொளிரு மொருபாற்
பெருகுபர மானந்த விழைவொளி நினைப்பதுகொல்
பெறுமுத்தி சத்தி யொளியே.

உரை. சத்தியாகிய ஒளியே, இருந்து கருணைசெய்யும் உன்னுடைய ஆக்கினைச் சக்கரத்துக்குள்ளாக உட்பட்டுச் சூரியசந்திர வடிவாகிப் பருவம் முதிர்ந்த பரஞான சத்தியுடன் கூடிய முறைமையையுடைய பரமசிவனை அவ்விடத்திற் பணிவாம். பணிவது, இப்பரமசிவனை நாடோறும் எழுகின்ற சூரியசந்திர கிரணங்களைக் கடந்து அனேகங் காந்திகளை விட்டெறிக்கின்ற ஆத்மலோகமாகிய ஓர் தலத்திற் பெருகுகின்ற மேலாகிய இன்பத்தையுடைய விருப்பந் தருகின்ற ஒளியாக ஒருபொழுது நினைப்பதுதானே பெறு முத்தி, அதனால்.

குறிப்பு. அதனல் என்பது எஞ்சி நின்றது.

தோன்று எழுவாயாக இருந்த யாம் என்னும் பெயரை வருவித்துப் பணிகுவாம் என்னும் வினைமுற்றுப் பயனிலை கொண்டு முடிக்க.

சூரிய சந்திர வடிவைப் பரமசிவனோடுங் கூட்டுக.

ஆம் - அசை.

இது ஆக்கினைச் சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறியது. (நரு)

இறைவிநின் விசுத்தித் தலத்திடை பளிங்குநிற
வெழிலொடுல கருடங் தையா
யுறையுமொரு சிவனையு மவன்போலு மாரம்ப
முடையவனை யும்ப ணிகுவா

நிறைமதி யொளிக்கொத்த நெறியே குமும தொளியி
னிலவுண்டு பசிகளை வதோர்
முறைபெறு சகோரமென வுலகுபா தகவிருண்
முடித்துக் களித்து றையுமே.

உரை. எல்லா வுலகங்களுக்கும் இறைவியே, நின்னுடைய விசுத்தித் தலத்து நடுவே பளிங்குநிற எழிலுடன் கூடி உலகங்களை அருளிய தந்தையாய் உறையும் ஒப்பற்ற சிவனையும், அச் சிவன்போலும் முதன்மையை யுடைய உன்னையும் அவ்விடத்திற் பணிவாம். பணிவது, இங்ஙனங் கூறிய நிறைமதியினுடைய ஒளியை நிகர்த்த நெறியாகச் சொல்லும் உங்களுடைய ஒளியினால் சந்திரனுடைய நிலவை உண்டு தம் பசியைக் களைவதாகிய ஓர் முறைமையைப் பெற்ற சகோரப் புள்ளென உலகமானது பாதகமாகிய இருளையெல்லாங் களைந்து மகிழ்ந்துறையும், அதனால்.

குறிப்பு. 'அவன்போலு மாரம்பமுடைய உனையும்' எனவே பளிங்குநிற வெழிலுடன் உலகங்களை அருளிய தாயாய் உறையும் ஒப்பற்ற உன்னையும் எனவாம்.

உலகு என்றது உலகில் உள்ள ஆன்மாக்களை.

இருவரொளிக்கும் சந்திரனொளிக்கும் உவமை. பாதகவிருட்கும் பசிக்கும் உவமை. சீவான்மாக்களுக்கும் சகோரப் புள்ளுக்கும் உவமை. களைவதற்கும் முடித்தற்கும் உவமை. ஆதலால், இதனுட் பண்பும் வினையும்பற்றிய உவமை என்னும் அலங்காரம் காண்க.

இது விசுத்திச் சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறியது. (௩௬)

முன்னைத் தபோதனர்த மிதயமா னதவாவி
முதுஞான முளரி நறவார்ந்
தன்னத்தின வடமொழிப் பெயர்பெற்று மொழிபயினு
மறுமூன்று விஞ்சை விரிவாற்

பன்னப்பொ திந்தநீ வினைநீரி னற்குணப்
பால்பிரித் துண்டு களியா
மன்னப்ப டுஞ்சிறைப் புள்ளிணையை நாடொறும்
வழுத்துது மலர்க்க மலையே.

உரை. கமலத்தையுடையவளே, நாடோறும் நிட்டையோடு இருந்த தபோதனருடைய இதயமாகிய மானத வாவியின்கண் முற்றுப் பெற்ற ஞானமாகிய கமலத்தினுள்ளே இருக்கின்ற பேரின்பமாகிய தேனை உண்டு அன்னத்திற்கு வடமொழியிற் சொல்லும் பெயரினைப் பெற்றுத் தாம் மொழியாகப் பயிலும் பதினெட்டு வித்தையினது விரிவினுல் ஆராய உலகினுள்ள ஆன்மாக்களிடத்திற் செறிந்த தீவினையாகிய நீரிலே நின்று நல்வினையாகிய பாலைப்பிரித்து உண்டு களித்து நிலைக்கப்படுஞ் சிறையையுடைய புள்ளிரண்டினையும் நாடோறும் வழுத்துவோம்.

குறிப்பு. ஆன்மாக்களிடத்துத் தீவினையும் நல்வினையும் கலந்து இருத்தலால், 'தீ வினைநீரி னற்குணப் பால்பிரித் துண்டு' என்றும், அப் புட்கள் ஒலித்த ஒலி பதினெட்டு வித்தையாகலால், 'மொழி பயிலு மறுமூன்று விஞ்சை' என்றும் கூறினர்.

முதுஞான முளரியி லிருப்பதனுல் நறவு பேரின்பம் என்பது பெறப்பட்டது. இது ஏகதேசவுருவகம்.

அன்னத்திற்கு வடமொழிப்பெயர் ஹம்ஸம்.

பதினெட்டு வித்தை யாவன இருக்கு, யசுஸ், சாமம், அதர்வணம் என்னும் வேதநான்கும்; மந்திரம், வியாகரணம், நிகண்டு சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் அங்கம் ஆறும்; மீமாம்சை, நியாயசாத்திரம், புராணம், தருமசாத்திரம், ஆயுள்வேதம், தனுர்வேதம், காந்தருவநூல், அருத்தசாத்திரம் என்னும் எட்டும் எனவிவை.

இதயம் - அநாகதம்.

மானதவாவி - பிரமன்வாவி.

தம்மென்பது சாரியை. அசை எனினும் அமையும்.

கமலத்தில் இருக்கும் நறவு உண்ணுதலும், பாலோடு கலந்த நீரைப் பிரித்து அப் பாலை உண்ணுதலும் அன்னத்தின் தொழில் ஆகலின், தொழில்பற்றிய தன்மை என்னும் அலங்காரமும், இவ்வாய உருவகஞ் செய்தமையால், இயைபுருவகம் என்னும் அலங்காரமும் இதனுட்காண்க.

இது சிவனையும் தேவியையும் இரண்டன்னங்களாக அநாகத சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறியது. (௩௭)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

விரித்தவிருள் விழுங்குசத்தி மின்னொடும்பன்
மணிபிந்த்ர வில்லி னோடுந்
தரித்தமறை பரவுசிவ தபனகதி
ரெறிப்பவதிற் றழன்று தீயிற்
புரித்துலகங் குளிரவொளி தழைத்தொளிரப்
பொழியமுத தாரை மாரி
பரித்தமணி பூரகத்துன் பச்சைமுகில்
பணிவனருள் பழுத்த கொம்பே.

உரை. அருளே பழமாகப் பழுத்த கொம்பு போன்றவளே, விரிந்த இருளை விழுங்குகின்ற சத்தியாகிய ஓர் மின்னுடனும் அணிந்திருக்கும் பன்மணிதாழ்வடமாகிய இந்திரவில்லுடனுங் கூடி எல்லா விதியையுந் தரித்த வேதங்கள் பரவுகின்ற சிவனாகிய சூரிய கிரணங்கள் பிரளயகாலத்தில் எறிப்ப அதிலே தழன்று கருகில் அவ்வுலகங்கள் பழையபடியே பின்பு குளிரும்படிக்கு ஒளியானது தழை

த்தொளிரப் பொழிகின்ற தாரையையுடைய மாரியைச் சுமந்த உன் கணவனாகிய பச்சைமுகிலை மணிபூரகத்திற் பணிவேன்.

குறிப்பு. இதனால் நீ அருளைச் செய்வாய் என்பது பெற்றாம்.

மின்னுடனும் வில்லுடனுங் கூடி மாரியைச் சுமந்த பச்சை முகில் எனக் கூட்டுக.

புரித்த உலகம் புரித்துலகம் எனக் கடைக்குறை விகாரமாயிற்று. "புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்" என மேலோர் கூறிய பாட்டினுள்ளும் உணர்க.

விரித்த புரித்த: இவை வலித்தல் விகாரம்.

இருளை விழுங்குதல் - இருளை நீக்குதல்.

இதனுள் மின்னும் இந்திரவில்லும், மாரியும் முகிலும் தம்முட் பொருத்தமுடையவாக உருவகஞ் செய்தமையால், இயைபுருவகம் என்னும் அலங்காரம் காண்க.

மணிபூரக சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறியது. (௩௮)

நிலைபெறு சுவாதிட் டான
 நின்சிவ வனலு நீயு
மிலகிய தன்மை நெஞ்சத்
 திறைஞ்சுவ முரைக்க மாட்டே
முலகமப் பார்வை செந்தீக்
 குருகினின் கருணை பொங்கி
யலையெறி யமுதப் பார்வை
 யளித்தினி தருளு மம்மே.

உரை. தாயே, அக்கினி நிலைபெற்று இருக்கின்ற சுவாதிட்டானத்திலே நின்னுடைய சிவனாகிய அனலும் நீயும் இருந்து ஒளிவிடப்

பட்ட சொரூபத்தை வாக்கினல் உரைக்கமாட்டோம், நெஞ்சத்தினல் ஒரு வண்ணம் இறைஞ்சுவம், அச் சிவனுடைய பார்வையில் புறப்படு கின்ற சிவந்த தீக்கு உலகங்களெல்லாம் கிடந்து உருகுமிடத்துக் கருணை பொங்கி அலை யெறிகின்ற அமுதத்தையுடைய நின் கடைக் கண் பார்வையானது அவ் வுலகங்களைக் காத்து இனிதாகிய சைத் தியகுண வுபசாரத்தைச் செய்யும், அதனல்.

குறிப்பு. அம்மை என்னும் பெயரின் ஈற்றைகாரம் விளியரு பின்கண் ஏகாரமாயுந் திரியும். "அன்னே நின்னையல்லால் யாரை நினை க்கேன்" என்ருர் மேலோரும்.

இது சுவாதிட்டான சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறி யது. (௬௧)

### எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

நீநந்து மூலவா தாரத்தி லானந்த
நிர்த்தமிடு மிறைவி நின்னே
டானந்த தாண்டவம் விளைத்துநவ வடிவுபெறு
மாதிசிவ னைப்பர வுவாம்
வானந்தொ டுத்துலக மடையப் படைத்திடுமிவ்
வகையின் புணர்ச்சி யலவோ
ஞானங்கொ டனைதந்தை யெனவுலகு தெளிவுற
நடத்துவது ஞான வொளியே.

உரை. ஞானவொளியாய் இருக்கின்றவளே, ஆக்கம் பெற்றிருக் கின்ற மூலாதாரத்தில் நீ ஆனந்த நிருத்தம் இடுகின்ற இறைவி. நின் னுடன் ஆனந்தத் தாண்டவத்தை வருவித்து நவாதவடிவு பெரு நின்ற எப்பொருட்கும் ஆதியாகிய சிவனைப் பரவுவாம். பரவுவது, ஆகாயமுதற் ருெடுத்து உலகங்களை அடையப் படைத்திடுகின்ற இவ் வகைப்பட்ட புணர்ச்சியினல் அல்லவோ உலகத்திலுள்ள ஆன்

மாக்கள் அறிவுகொண்டு உங்களைத் தெளிவுறத் தாயும் தந்தையும் என நடத்துகின்றது, அதனால்.

குறிப்பு. உலகு என்றது இங்கே ஆன்மாக்களை.

உலகத்தில் தாய் தந்தை என நடப்பதும் இதுபற்றி.

இருவரும் ஆனந்த நிருத்தஞ் செய்தற்கு இடமாய் இருத்தலால், 'நீ நந்து மூலவா தாரம்' என்றார்.

நவரசமாவன இனிமேல் "அரனிடத்திற் பேரின்ப" மென்னுங் கவியுட் காட்டப்படும். எண்வகைச் சுவையுடன் சாந்தமென்னும் சுவை கூட்டப்படும். அவை நிருத்தத்திற்கே பெரும்பான்மையும் உரிய.

இன் - சாரியை.

ஒகாரம் - எதிர்மறை.

இது மூலாதார சக்கரத்தில் தரிசிக்கும் இயல்பு கூறியது. (௪0)

ஆனந்தலகரி

முற்றுப்பெற்றது.



# சௌந்தரியலகரி.

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அந்தர மணித்தபனர் பலமணியின் வடிவெடுத்
 தமருமுன தம்பொன் முடிமே
லிந்துகலை நவமணிபி னெழுகுபல நிறமடைந்
 திலகுமதி சயவ டிவினாற்
சந்த்ரகலை நன்றுநன் றென்பர்சில ரன்றன்று
 சந்த்ரகலை யிந்த நிறமோ
விந்த்ரசிலை யிந்த்ரசிலை யென்பர்சில ராதலால்
 யாதென வழுத்த வுமையே.

உரை. உமையே, விண்மணி என்னும் ஆதித்தர் பன்னிருவரும் பல நிறங்களை யுடைய மணியின் உருவம் எடுத்துப் பொருந்து கின்ற உனது அழகிய பொன்முடிமேலே இருக்கிற இந்துவின் கலை யாகிய இளம்பிறையானது அவ்வொன்பது வகைப்படும் மணியிற் புறப்படும் பல நிறங்களை அடைந்து ஒளிரும் அதிசயத்தைத் தருகி ன்ற வடிவினால், சிலர் சந்திரகலை இவ்வண்ணம் பெற்றது நன்றுநன் றென்பர், சிலர் அன்றன்று சந்திரகலை இந்த நிறத்தை உடையதோ இஃது இந்திர சிலை இந்திரசிலை என்று சொல்வர். ஆதலால் சந்திர கலை இந்திரசிலை என்னும் இரண்டினுள் யாதென்று சொல்லிப் புகழ் வேன்?

குறிப்பு. வழுத்த என்னுஞ் செயவென்னெச்சத்தைத் தன்மை யொருமை வினைமுற்றாகக் கொள்க.

ஆதித்தர் பன்னிருவருக்கு ஏற்பப் பன்னிருமணி என்னாது நவமணி என்றது உலகத்து இனப்பட்டது பற்றி.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள் சந்திரகலையானது காண்போர் வியப்பத்தன்னிறம் வேற்றுமைப்பட்டதனாலும், இந்திரசிலை எனத் தோன்றுதலாலும், திரிபதிசயம் என்னும்அலங்காரங் காண்க. துணியாமையால், ஐயவதிசயம் என்னும் அலங்காரமெனினும் அமையும். (சக)

அலர்ந்தகரு நெய்தலங் காடெனக் கடைகுழன்
றறநெய்த் திருண்டு செறிவோ
டிலங்குறு மியற்கைமண மெண்டிசை யளப்பவதி
விதழ்முழ்த நறைறவி ழைவினாற்
பொலன்கொண்முடி யாகண்ட லேசர்பொற் றுணர்வீரி
பொதும்பர்மது மலர்ப டிவதோர்
சிலம்பளி பரந்தவுன தோதியென் மனத்திருட்
செறிவுதெற வருள்க மலையே.

உரை கமலையே, அலர்ந்த கரிய நெய்தற்காடென்னும்படி கடைபயிர்க்குழைவு பெற்று மிக நெய்த்து இருண்டு செறிவுடனே கூடி விளங்க வீசும் இயற்கை மணம் எட்டுத் திக்கையும் இவ்வளவென்று அளப்ப அந் நாற்றம் தேவருலகளவு நாறுதலால் அதனுட்சென்று தன்னிதழ் முழுகவேண்டும் மணவிருப்பத்தோடு பொன்னாலாகிய முடியைச் சூடிய இந்திரருடைய கற்பகவனத்திற் பொன்னிறமாய் இருக்கும் கொத்துக்களில் விரிகின்ற தேனையுடைய மலர் வந்து படிவதாகிய ஆரவாரஞ் செய்யும் வண்டுகள் பரந்த உனது ஒப்பற்ற கூந்தலானது என் மனத்திலுள்ள இருட்செறிவை நீக்க அருள்வாய்.

குறிப்பு. மணவிருப்பத்தோடு மலர்வந்து படிவதாகிய கூந்தல் எனக் கூட்டுக.

நெய்த்தல் - சருச்சரையில்லாமல் இருத்தல்.

இதனுள் தொழிலதிசயம் என்னும் அலங்காரங் காண்க. (சஉ)

மோதிய வெங்கதிர் மீளவெ ருண்டிருண்
மூடவொ துங்கிய வாறேயோ
சோதிமு கங்கவி னேறி வழிந்தன
சோர விடுங்கவர் காலேயோ
வோதி பிணைந்துபின் வீழ வகிர்ந்தத
னூடெழு தும்ப்ரபை யாதேயோ
கோதறு சிந்துர ரேகை வளம்பிறர்
கூறுவ தன்றிது மாதாவே.

உரை. மாதாவே, உனது கூந்தல் பின்னலாகப் பிணைந்து முதுகில் வீழ வகிர்ந்து அதன் நடுவே நெடியதாக எழுதப்படும் பிரபையானது, உலகத்தில் உள்ள இருளெல்லாம் அஞ்ச முன் மோதிப் புறப்பட்ட வெய்ய கதிரையுடைய சூரியன் இருளெல்லாம் திரண்டு இருபுறமும் வந்து மூடப் பின்பு அஞ்சி நடுவே ஒதுங்கியவாறோ, அஃதன்றி உன்னுடைய சோதி பொருந்திய முகமாகிய குளத்தினிடத்து அழகாகிய நீர் நிரம்பிப் பின்பு அதுகொள்ளாமல் ஏறி வழிந்தன கழிந்து போக விடப்படுங் கலிங்கோ, அஃதன்றி யாதோ, எனக்கறியப்படுவதல்ல, ஆகலால் இப் பிரபையைக் குற்றமற்ற சிந்தூரரேகையின் வளமென்று பிறர் கூறுவதொன்றும் என்னெஞ்சத்திற்குப் பொருத்தமன்று.

குறிப்பு. அழகின் நிறம் சிவப்பு.

ஓவியன் படத்தில் எழுதிய ஓர் சித்திரத்தைக் கண்டு இது குளமோ யாறோ கடலோ என்று ஐயுற்று வினவுவதுபோல வினவுதலால், எழுதும் பிரபை என்று உட்கொண்டும் ஐயந்தோன்றக்கூறியது குற்றமாகாதென்க.

எறிவழிந்தன கழிந்துபோக விடுங்கவிங்கோ ளென்பதனால், முக த்தைக் குளமாகவும் கவினை நீராகவும் உருவகஞ் செய்து கொள்க.

ஏகாரங்கள் - இசை நிறை.

ஓகாரங்கள் - வினு: "ஈசனை யொப்பவர் தேவர் கணத்திடை யாரேயோ" என்றார் பிறரும்.

வெங்கதிர் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

சிந்தூரம் சிந்துரம் எனக் குறுகியது.

இதனுள், ஐயவதிசயம் என்னும் அலங்காரமும், அவநுதி என் னும் அலங்காரமும் காண்க.

கேசாதி பாத வர்ணனையாகத் தேவியுடைய உறுப்புக்களைப் பாடியவதனால் இம் மூன்று கவியுங் கேச வர்ணனை கூறின. (சஙு)

எஃசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

கூரெயிற்றி னகவிதழுங் கொண்கர்விழி வரிவண்டுங்
குழற்படிந்த மதுகரத்தின் குழாமுங் கூடிப்
பேரியற்கை மணம்பொதிந்து புன்முறுவன் முகையவிழப்
பிறழுமுன தருணமுக கமல மென்று
லோரியற்கை வாடுமிதழ் பொறிவண்டே படிவதுமற்
றோரியற்கை செயற்கைமணம் போது செய்யு
நீரியற்கை மலர்க்கமல மிதற்குடைந்து பங்கமுற
னீதியென்பதி யாரறியார் நிகரின் மாதே.

உரை. ஒப்பில்லாத மாதே, கூரிய எயிற்கிய உள்ளிதழையும் உன்னுடைய கணவர் கண்ணாகிய வரியையுடைய வண்டையுங் குழ லிலே படிந்த வண்டினது கூட்டத்தையும் பொருந்தி இயற்கையா

கிய மிகுந்த மணத்தையும் உடைத்தாய்ப் புன்சிரிப்பாகிய முகை அவிழ ஒளிருமுனது சிவப்பையுடைய முகமாகிய கமலமென்று யாவருஞ் சொல்லலாயிருக்க, ஓரியற்கை தன்னிதழ் முழுதும் வாடும், பிறிதோரியற்கை பொறிவண்டே மேற்படியப் பெறுவது, தனது மணமுஞ் செயற்கை மணமே, அதுவுமன்றிப் போதாகியே விரியாநிற்கும், இவ்வியல்பினையுடைய நீரின்கண் இயற்கையாக இருக்கின்ற கமலமலர் இம்முக கமலத்திற்கு உடைந்து தாழ்வுபடுதல் நீதி என்று சொல்வது யாவர் அறியார்? எல்லாரும் அறிவார்.

குறிப்பு. பங்கமுறல் என்பதனால், சேற்றினிடத்து உறுதலென, அதன் றன்மைத் தொழில் கூறிய வாறுங் காண்க.

முக கமலத்தினுடைய எயிறுகிய இதழ் ஒருகாலும் வாடாது என்பதுபற்றி அதற்கு மாறுபாடாக நீரின்கண் இருக்கும் கமலவிதழ் வாடும் என்றும், முக கமலத்திற் பொருந்திய கணவர் கண்ணாகிய வண்டிற்கும் குழற்படிந்த வண்டிற்கும் பொறியின்மைபற்றி அதற்கு மாறுபாடாக நீரின்கண் இருக்கும் கமலத்தில் பொறிவண்டே படிவது என்றும், முக கமலத்தின் மணம் இயற்கை என்றது பற்றி அதற்கு மாறுபாடாக நீரின்கண் இருக்கும் கமலத்தின் மணம் செயற்கையென்றும், முக கமலம் எப்பொழுதும் குவியாமல் புன் சிரிப்பாகிய முகை அவிழாநிற்கும் என்பதுபற்றி அதற்கு மாறுபாடாக நீரின்கண் இருக்கும் கமலம் போதாகியே விரியும் என்றும் கூறினார்.

கணவர் கண்ணாகிய வண்டு பொருந்தல் - இடைவிடாமல் பார்த்தல்.

குழற்படிந்தவண்டு - பொன்னந்தும்பி. அது தாமரையிற் செல்லாது. குழற்படிந்தவண்டு முகத்திற்குப் பொருத்தமாகக் கூறியது மயிர்க்கற்றை முகத்துடன் கூடி ஒற்றுமை நயம்பற்றி இருத்தலால் என்க.

நீரின்கண் இருக்கும் கமலமலர் வாடுதல்-பழம்பூவாக உதிர்தல்.

மதுகரத்தின் குழாம் என்பது ஆறனுருபு தொகைப்பட்டு ஒன்றன் கூட்டத் தற்கிழமை கொண்டது.

போது செய்தல் - பக்குவமாய் முறுக்கவிழ்தல்.

> "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
> மாலை மலருமிந் நோய்"

என்றார் மேலோரும்.

முக கமலத்தின் மணம் இயற்கை யென்றது, வாயில் இயல்பாகத்தோன்றும் மணத்தினை. அன்றியும், முகமும் தாமரைமணம் போல் இயல்பாக மணக்கும் எனினும் பொருந்தும்.

நீரின்கண் இருக்குங் கமலத்தின் மணம் செயற்கை என்றது, நீரினுலும் பருவத்தினுலும் உண்டாதலால்.

எயிற்றி னகவிதழ் என்பதனுள், இன் - அல்வழிக்கண் வந்த சாரியை.

> "சாய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
> வீசின போதுள்ள மீனிழந்தார்."

என்றார் மேலோரும்.

இதனுள், நீரில் இருக்கும் கமலப்போன் றிருத்தலால் முகத்தைக் கமலமாக உருவகஞ் செய்துவைத்துப் பின்பு அதற்கும் இதற்கும் வேற்றுமை செய்தமையின், வேற்றுமை யுருவகம் என்னும் அலங்காரம் காண்க.

இது முக வர்ணனை கூறியது. (சுக)

கலி விருத்தம்.

கோதை நீண்முடி கொண்டொளிர் திங்கள்சேர்
பாதி வானுத லென்று படிந்ததோ

விது கூடி யிரண்டு நிறைந்ததோ
சீத பூரணத் திங்கள் சிறந்ததே.

உரை. கோதாய், உன்னுடைய நீண்ட முடிமேற் கொண்டு ஒளிர்கின்ற நிறைந்த திங்களின் மேலாகச் சேர்ந்திருந்த பாதியும் ஒளியையுடைய உனது நுதலாகவந்து இழிந்து படிந்ததோ, அதுவு மல்லாமல் உவாவிற் குளிர்ச்சியோடு நிரம்பி வட்டங் கொண்ட திங்களாகச் சிறந்தது இந் நுதலாக வந்திழிந்து படிந்த பாதிமதியும் முடிமேல் இருக்கின்ற பாதியுமாகிய இரண்டுங் கூடி நிறைந்ததோ, எனக்கறியப் படுவதாய் இருந்ததல்ல. நீ சொல்வாயாக.

குறிப்பு. ஒகாரங்கள் – வினா.

இதனுள், முடிமேற் சூடிய திங்களிற் பாதிவந்து இந் நுதலாகப் படிந்ததோ என்றும், இவை யிரண்டும்கூடி உவாமதியாகி ஆகாயத்தின்கண் நிறைந்ததோ என்றும், இயல்பாக நிகழுந்தன்மை ஒழியக் கவி கருதிய வதன்மேல் ஏற்றிக் கூறியவதனால், தற்குறிப் பேற்றம் என்னும் அலங்காரங் காண்க.

இது நுதல் வர்ணனை கூறியது. (சரு)

### அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

சுருவிழிச் சுருப்பு நாணுன்
கண்மல ரம்பு கன்னற்
புருவவி னடுவொ ழித்தல்
போன்றது வினைத்துப் போர்மேல்
வருமதன் பிடித்த கைக்குண்
மறைந்தது போலு மென்றுற்
றிருமகள் பரவு மம்மே
சிலைபிது புருவ மன்றே.

உரை. திருமகள் பரவாநின்ற தாயே, உனது கருவிழியாகிய வண்டுநாணையும் கண்ணாகிய மலரம்பினையும் உடைய புருவமாகிய கருப்புவில்லினுள் இடைவிட்டிருப்பது போலத் தோன்றியது, வலக் கையால் நாணை வாங்கி அதனை வளைத்துப் போர்மேல் வருங் காமன் இடக் கையினாற் பிடித்த பிடிக்குள் மறைந்தது போலும் என்று யாவரும் சொல்லலால், உன்னுடைய நெற்றியில் இருக்கும் இஃது அக் காமனுடைய வில்லே, புருவமன்று.

குறிப்பு. கண்ணென்றது வெள்ளிய விழியுடன் இமையை.

இதனுள், புருவம் என்னும் உண்மைப்பொருளை மறுத்துச் சிலை யென்னும் ஒப்புமைப்பொருளை உடன்பட்டு உருவகஞ் செய்தமை யால் அவநுதி யுருவகம் என்னும் அலங்காரங் காண்க.

இது புருவ வர்ணனை கூறியது. (சுசு)

### கொச்சகக் கலிப்பா.

ஒருமலர்க்க ணிரவிவலத் துதித்தருளு நண்பகலு
மொருமலர்க்கண் மதியமிடத் துதித்தருளும் பேரிரவும்
திருநுதற்கட் பொற்கமலச் செந்நிறத்தீ விளைத்தருளும்
விரவுசெக்கர் மாலையுமுன் விழைவகலா விழுப்பொருளே.

உரை. விழுமிய பொருள் போல்பவளே, உன்னுடைய மலர் போலும் ஓர் கண்ணாகிய இரவி முகத்தின் வலப்புறத்தில் உதித்துத் தருகின்ற நண்பகற் பொழுதும், மற்றோர் மலர்போலுங் கண்ணாகிய மதியம் இடப்புறத்தில் உதித்துத் தருகின்ற நெடிய இராப்பொழு தும், திருநுதலிலே இருக்கின்ற பொற் கமலம் போலும் கண்ணா கிய சிவந்த நிறத்தையுடைய தீ தருகின்ற விரவிய செக்கர் மாலைப் பொழுதும் உன் மன மகிழ்ச்சியை நீங்கா.

குறிப்பு. நீங்கா எனவே உனக்கு அழிவில்லை யென்பதும் கண் களால் ஆயிற்று.

விரவுதல் - பகலும் இரவுஞ் சந்தித்தல்.

இதனுள், மூன்று காலங்களுங் கண்களால் தோன்றப்படுவதாக்கிக் கூறியவதனால், துணிவதிசயம் என்னும் அலங்காரங் காண்க. ()

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

கோலநகர் விசாலையாய் நிரந்தரகல் யாணியாய்க்
குவலயத்தா லயோத்தியாய்க் குலமதுரை தானாய்ச்
சாலவொளிர் போகவதி யாயமுத தாரையாய்த்
தண்ணளியா லவந்தியாய்ச் சகவிசயை யெனலாய்
நீலவிழி புடைபரந்து நெடுநகரப் பெயர்கவர்ந்து
நீண்டுசேந் தரிபரந்து நிகரொழிக்கு மென்று
லால்விட மமுதெனக்கொண் டருந்தியவுன் மத்தர்புர
மதனிலொரு புறங்கவர்த லதிசயமோ தாயே.

உரை. தாயே, விசாலத்தை யுடைத்தாய் இருப்பதனால் அனேக நகரங்களுள் அழகையுடைய நகராகிய விசாலையாய், நாடோறும் மங்கலத்தோடு கூடி இருத்தலால் கல்யாணியாய், நீலமலரால் வெல்லப்படாமல் இருத்தலால் அயோத்தியாய், அடியார் கண்களுக்கு மதுரமாய் இருத்தலால் குலமதுரை தானாய், மிக ஒளிருகின்ற போகந்தங்கும் இடமாய் இருத்தலால் போகவதியாய், அமுதத்தைத் தரித்தலால் அமுததாரையாய், தண்ணளியினால் அளிப்பதாய் இருத்தலால் அவந்தியாய், இவ்வேழு நகரங்களேயன்றி உலகத்திலுள்ள நகரங்களையும் வெற்றி கொள்வதென்று சொல்லலாய்ப் புடைபரந்து இங்ஙனங் கூறிய நெடிய நகரங்களினது பேரைக் காரணத்தால் கவர்ந்து மிக நீண்டு சிவந்து அரி பரப்பி உன்னுடைய நீல நிற விழியே தனக்கொப் பொழிக்கும் என்று யாவரும் சொல்லலாய் இருக்க, பாம்பினது விடத்தை அமுதமென உட்கொண்டு அருந்திய உன்மத்தராகிய நாயகருடைய வடிவமதனில் ஒரு புரத்தை நீ கவர்தல் அதிசயமோ? இஃது அதிசயமல்ல.

குறிப்பு. கண்களுக்கு மதுரமாய் இருத்தல் - கண்களுக்கு இன்பந் தருதல்.

நகரிற்கும் உடம்பிற்கும் பொதுப்படக் கொள்ளவேண்டி உடம்பைப் புரமென்றார்.

ஒகாரம் - எதிர்மறை.

இதனுள், தொழிலதிசயம் என்னும் அலங்காரங்காண்க. (சஅ)

### கோச்சகக் கலிப்பா.

இருசெவியுண் பலகவிதை யிணரொழுகு பசுந்தேனிற்
பெருகுநவ ரசமருந்திப் பிறழ்ந்திடுமுன் பிணைவிழியாங்
கருநிறவண் டிணைகளிப்பக் கண்டுபொறா தென்னேயோ
வரிநுதற்க ணளிசிவந்த வளம்பாராய் மலர்க்கொடியே.

உரை. மலரையுடையகொடிபோல்பவளே, உன்னுடையஇரண்டு செவியும் உண்ணப்பட்ட கலைமகள் முதலாயினோர் புகழ்ந்து பாடும் பல கவிதையாகிய பூங்கொத்தினின்றும்ஒழுகுகின்ற பசுந்தேனிலே மிகுந்த புதிய சுவையை உண்டு உகளாநிற்கும் உன்னுடைய இருவிழியாகிய கரிய நிறத்தையுடைய இரண்டு வண்டுங் களிப்பக் கண்டு, மனம்பொறாமல் செவ்வரியையுடையநுதற்கண்ணாகிய வண்டு சிவந்த வளத்தை ஆடியினாற் பாராய்.

குறிப்பு. ஆடி என்பது அருத்தாபத்தியினாற் பெறப்பட்டது.

நவரதமென்பதற்கு ஒன்பது வகைப்பட்ட சுவை எனினும் பொருந்தும்.

கடைக்கண் காதளவு செல்லுதலால், 'பெருகுநவ ரதமருந்திப் பிறழ்ந்திடுமுன் பிணைவிழியாங் கருநிறவண்டு' என்றும், சிவப்புச் சினத்தினால் வருமென்பது கருதி 'வரிநுதற்க ணளிசிவந்த வளம் பாராய்' என்றும் கூறினார்.

"பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்."

என்பது கொண்டு என்னும், எயும், ஒவும் இடைச்சொல் லெனக் கொள்க.

இதனுள் தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரங் காண்க. (சகூ)

எஃகீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அரனிடத்திற் பேரின்ப மருளுமவ னல்லார்பா
லருவருக்கு மவன்முடிமே லணிநதியைச் சீறும்
பரவுநுதல் விழியழன்முன் பார்த்திலபோ லதிசயிக்கும்
பணிபாய பணிவெருளப் பயந்தனபோ லொடுங்கும்
விரைமுளரிப் பகைதடிந்து வீரரதம் படைக்கும்
வினவுதுணைச் சேடியர்க்கு விருந்துநகை விளைக்கு
மிரவுபக லடிபரவு மெளியனைக்கண் டருள்புரியு
மித்தனையோ படித்தனவுன் னிணைவிழிக டாயே.

உரை. தாயே, உன்னுடைய கணவராகிய அரனிடத்திற் பெரிய இன்பத்தைக் கொடுக்கும், அவனல்லாதவரிடத்து அருவருப்போடு கூடி இருக்கும், அவன் முடிமேல் இருக்கின்ற அழகையுடைய கங்கையாற்றைச் சீறும், யாவரும் பரவுகின்ற சிவனுடைய நுதல் விழியனலை முன்பு ஒருகாலும் பார்த்ததில்லைப்போல் அதிசயப்படும், அவனுடைய ஆபரணமாகிய பாம்புகள் வெருள அவற்றிற்குப் பயந்தனபோலே ஒடுங்கும், நறுநாற்றத்தையுடைய தாமரையாகிய பகையைப் புறங்கண்டு வீரரதத்தைப் படைக்கும், உசாத்துணையாய் இருக்கின்ற சேடியர்க்கு நல்விருந்தாக நகையைச் செய்யும், இரவும் பகலும் நின்னடியைப்பரவும் எளியனைக்கண்டு அருள்புரியாநிற்கும்; ஆகலால், உனது விழிகள் இரண்டும் இத்தனை எல்லாம் படித்தனவோ?

குறிப்பு. விருத்து - விகாரம்.

ஓகாரம் - வினா.

இதனுள், காமம், இழிப்பு, உருத்திரம், வியப்பு, அச்சம், வீரம், நகை, கருணை என்னும் எண்வகைச் சுவையும் புலப்படக் கூறிய வதனால், சுவை என்னும் அலங்காரங் காண்க. சாந்தமென்னுஞ் சுவை விகாரமின்மையில், கூத்தர்நூலின்படி எட்டேவேண்டினர். (௫0)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

இகல்பொரக் குழையை முட்டு
மிமைமயி ரொழுங்கிற் றாவ
ணிகரறு சித்தர் யோக
நீக்கிவெம் போக நல்குஞ்
சிகரவெற் பரசன் றொல்லைத்
திருமர பென்னுந் தெய்வ
மகுடமா மணிநின் கண்கள்
வயமதன் வாளி தானே.

உரை. சிகரத்தோடு கூடிய வெற்பரசனுடைய பழைய திருமர பென்று சொல்லப்படுந் தெய்வ மகுடத்தில் அழுத்திய மாணிக்கம் போன்றவளே, பகையைப் பொரும் படிக்குக் காதளவு வாங்கினது போலக் குழையை முட்டியிருக்கின்ற இமைமயிராகிய ஒழுங்கினை யுடைய அம்பினிறகு நிகரற்ற சித்தருடைய யோகப்பயிற்சியாகிய சாந்தத்தை நீக்கி வெய்தாயிருக்கின்ற போகத்தைக் கொடுக்கும்; அதி னால், நின்னுடைய கண்கள் வலியையுடைய மன்மத னம்புதான்.

குறிப்பு. 'வாளிகொல்லோ' என்று பாடமாயின், அம்போ என்று பொருளுரைத்து ஓகாரத்தை வினாவாக்கிக் கொல்லென்ப தனை அசையாக்குக.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க. (௫௧)

வரிவிழிச் செம்மை வெண்மை
வனப்புறு கருமை மூன்று
மெரிதெறு கற்ப காலத்
திறந்தமுப் பொருளுந் தோன்றுங்
கருவெனக் குணங்கண் மூன்றின்
காரண மென்னப் பெற்று
லருமறைப் பொருளே யுன்ற
னருளலா துலக முண்டோ.

உரை. அரிய வேதத்தினது பொருளாயிருக்கின்றவளே, உன்னுடைய வரிபரந்த விழியில் இருக்கின்ற அழகுற்ற சிவப்பு வெளுப்புக் கறுப்பாகிய மூன்று நிறமும் ஊழித் தீ முதலாயின தெறுகின்ற பிரளயகாலத்தில் இறந்த மும் மூர்த்திகளாகிய முப்பொருளுந் தோன்றுங் கருவெனவும் அவர் பெறும் முக் குணங்களின் காரணமெனவும் பெற்றால், உனது அருளையன்றி உலகமென ஒன்று உண்டோ? அஃதில்லை.

குறிப்பு. இராசதம், சாத்துவிகம், தாமதம் என்னும் முக் குணமும் முறையே சிவப்பு வெளுப்புக் கறுப்பாகலால், முக் குணத்தையும் தரும் காரணம் எனக்கூறினர்.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள், ஆதாரவேது என்னும் அலங்காரங் காண்க. (௫௨)

அம்மைநின் கருணை பொங்கி
யலைமெறி நயன வேலை
மும்மணி கெழுமுன் றௌண்டார்
மும்மலங் களைய மூழ்கச்

செம்மைதன் சோணை யாறு
தெளிகங்கை யமுனை மூன்றுந்
தம்மயத் தொடும்வந் துற்ற
தன்மையி தென்பர் மிக்கோர்.

**உரை.** தாயே, கருணைபொங்கி அலை எறிகின்ற நின்னுடைய நயனமாகிய கடலினிடத்து இருக்கின்ற செம்மணி வெண்மணி கருமணி என்னும் மூன்றையும், உன்னை அடையும் உன் றொண்டரானவர் காமம் வெகுளி மயக்கம் என்னும் மும் மலங்களையும் களையும்படி மூழ்கச் சிவப்பையுடைய நல்ல சோணையாறும், வெண்மையாய்த் தெளிந்த கங்கையாறும், கறுத்த யமுனையாறும் தத்தம் நிறத்தோடும் வந்து கூடிய தன்மை என்று சொல்வர் மிக்கோர்.

**குறிப்பு.** காமம், வெகுளி,மயக்கம் என்னும் மும் மலமும் முறையே வெளுப்புச் சிவப்புக் கறுப்பாகலால், அவற்றை அவ்வந் நிறத்தையுடைய யாறுகள் கழுவும்படிக்கு வந்து கூடினாற்போன் றிருத்தலால், மும் மணியையும் திரிவேணி சங்கமென்பர் எனக் கூறினர்.

கண்ணில் இருக்கும் மூன்று நிறத்திற்கும் மணியென்றே பெயர்.

"கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்"

என்றார் மேலோரும்.

ஈது என்பது - இடைச்சொல்.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரங் காண்க.(நிஉ)

இடம்படர் கொடியே நின்க
ணிருசெவிக் குரைப்ப தேதென்
றடர்ந்தெழு கயலின் கண்க
ளடைப்பில பயப்பட் டம்மா

கடும்பகற் கமல வீடுங்
கங்குல்வாய் நெய்தல் வீடு
மடைந்தனள் கமலை யொன்றோன்
றடைப்பன கண்டு கண்டாய்.

உரை. சிவனுடைய இடப்பாகத்தில் படர்ந்த கொடிபோல்பவளே, நின்னுடைய கண் வந்து உன் திருச்செவிக்கு மந்திரமாக உரைப்பது யாது காரணம் என்று யாற்றுநீர் முதலாயின நீரிலே நெருங்கி எழுகின்ற மீன்கள் தாம் கண்போல் இருத்தலால் நம்மை அபயஞ் செய்ய உரைக்கின்றதோ என்று அஞ்சித் தங்கண்கள் ஒருபொழுதும் இமைப்பதில்லை, அதுவுமன்றிக் கமலமும் நெய்தலும் கண் போன்றிருத்தலால் அவற்றின் நிறத்தைக் கவருதற்கு உரைக்கின்றதோ என்றஞ்சி இராப்பொழுது கமல மலரும் பகற்பொழுது நெய்தன் மலரும் இதழாகிய கதவை அடைப்பனவாச் செய்து பகற்பொழுது கமல மலராகிய வீட்டினிடத்தும் இராப்பொழுது நெய்தன்மலராகிய வீட்டினிடத்தும் மாறி மாறிப் போய் இருந்தாள் கமலை.

குறிப்பு. கண் காதளவு சென்று இருப்பதனை நோக்கிக் கமலையானவள் கமலமும் நெய்தலும் தனக்கு வீடாகலால் பகற்பொழுதெல்லாம் கமலத்தைக் காத்தும், புறப்படும்பொழுது அக்கமலத்தை இதழாகிய கதவால் அடைக்கச்செய்து நெய்தலிடத்து வந்து அதன் இதழாகிய கதவைத் திறக்கச்செய்து அதனை இராப்பொழுதெல்லாம் காத்தும், புறப்படும்பொழுது அந் நெய்தலை அடைக்கச் செய்து கமலத்தின் இடத்துவந்து அதனை திறக்கச்செய்தும்,இதுவே தொழிலாகத் திரிகின்றாளென்ன வேண்டிக் 'கடும்பகற் கமலவீடுங் கங்குல்வாய் நெய்தல் வீடு மடைந்தனள் கமலை யொன்றோன் றடைப்பன கண்டு' என்றும், மீனின் கண்ணுக்கு இமை இல்லை என்பது ஒருதலை என்றெண்ணிக் 'கயலின்கண்க ளடைப்பில பயப்பட்டு' என்றும் கூறினர்.

பயப்பட்டு என்பதனால், நீரின்கட்பட்டு என அதன்றன்மைத் தொழில் கூறியவாறுங் கொள்க.

பகலென்பது தன் வெம்மையினால் கடும்பகலென அடையடுத்து நின்றது.

கமலத்தையும் நெய்தலையும் சாதிபற்றி ஒன்றொன்று எனப் பட்டது.

கண்டு என்பது ஈண்டுச் செய்தென்னும் தொழிலாய் நின்றது.

அம்மா என்பதும் கண்டாய் என்பதும் முன்னிலையசை. இதனுள் மேற்கூறிய கவி அலங்காரமே காண்க. (ருசு)

இணைவிழி யிமையா நாட்ட
மெய்திய தலரத் தோன்றும்
பணைநெடும் புவன மிந்தப்
பார்வைசற் றிமைக்கு மாயிற்
றுணையிழந் தழிவ தெண்ணித்
துணிந்தநின் கருணை யென்றாற்
கணையினுங் கொடிய தென்னக்
கடவதோ கடவுண் மாதே.

**உரை.** தெய்வமாதே, உன்னுடைய கண்ணலர்வது காரணமாகத் தோற்றும் பெரிய நெடிய புவனம் இக் கண் பார்த்த பார்வை சிறிது பொழுது இமைக்குமாயின் அப் பார்வையாகிய துணையையிழந்து அழிந்து விடுவதனைக் கருதித் துணிந்த நின் கருணையினால் உன்னிருவிழியும் இமையா நாட்டமாக இருந்ததென்று யாவருஞ் சொல்லலாயிருக்க, இவ்வருளையுடைய அதனை அம்பினுங் கொடியதென்று சிலர் சொல்லக்கடவதோ? கடவதல்ல.

குறிப்பு. மூன்றாம் வேற்றுமை விகாரத்தாற் றொக்கது.

சற்று என்பது சிறிதென்பது. "உற்ற வாய்மை சற்றுந் தருகிலிர்" என்றார் பிறரும்.

ஒகாரம் - எதிர்மறை.

இதனுள், பொருளேது என்னும் அலங்காரமும், தன்மை என்னும் அலங்காரமும் காண்க. (ருரு)

நெடியகட் கரிய நெய்த
 னிறையருட் சலதி யெய்தாக்
கொடியனேன் பிறவித் துன்பக்
 குரைகடல் கடந்து மூழ்க
விடினதிற் குறைவ துண்டோ
 மெய்த்தவர்க் கொழிந்து ளுதோ
கடிநகர் நிலவு காட்டிற்
 காயுமே கருணை வாழ்வே.

உரை. கருணைச் செல்வமாயிருப்பவளே, உன்னுடைய நெடிய கண்ணாகிய கரிய நெய்தற் பூவின் நிறைந்த கருணைக் கடலை அடைந்திடாத கொடியனேனது பிறவியாகிய துன்பம் பொருந்திய குரை கடலைக் கடந்து யான் மூழ்கும்படி நீயே கருதி அக் கருணைக் கடலினிடத்து என்னை விடில் அதிற் குறைந்து போவதுண்டோ? அப்படி விடினும் மெய்த் தவத்தை யுடையவர்க் கொழிந்து என்னை மூழ்கச்செய்யாதோ மாடகூடங்களோடு கூடிய காவலையுடைய நகரில் எறிக்கும் நிலவு விடர்களோடு கூடிய கரிந்த காட்டினும் எறிக்குமே, அதனால் என்னையும் முழுகச் செய்யும்.

குறிப்பு. நகர்க்கு மாடகூடமும் காட்டிற்கு விடரும் கரிதலும் வருவித்தது நகரின் உயர்வும் காட்டின் இழிவும் பற்றி.

குரை கடலென்பதற்கு அடையாக நின்றது.

ஏகாரம் - தேற்றம்.

ஒகாரங்கள் - எதிர்மறை; வினுவெனினும் அமையும்.

இதனுள், தவத்தோரன்றி என்னையும் மூழ்கச்செய்யும் என்னும் பிறிதொன்றனைப் பெறப்படுதலால் ஒட்டு என்னும் அலங்காரங் காண்க. (௫௬)

கருங்குழ னுதற்கட் பின்னற்
கவின்கடைக் கபோலந் தாழ்ந்த
வருங்குழை கடந்த கண்ணி
னயிற்கடை யனங்க சாப
நெருங்குறத் தொடுத்த வேவி
னிமிர்தலை யேய்க்கு மென்றுன்
மருங்கில்பொற் றிருவே யாருன்
மதர்விழி பரவ வல்லார்.

**உரை.** மருங்கு இல்லாத பொன்னிறத்தையுடைய அழகுபொருந்தினவளே, உன்னுடைய நுதலின்மேற் பின்னிய கரிய குழற்பின்னலின் கடைபொருந்திய கபோலத்தில் தங்கிய அரிய குழையைக் கடந்த உன் கண்ணினது கூரிய கடையினது பகையை நெருக்கும்படிக்கு நிறைய வாங்கிய காமன் வில்லில் தொடுத்த அம்பினுடைய நிமிர்ந்த தலையை ஒக்குமென்று எல்லாருஞ் சொல்லலால், யாவர் உன்னுடைய மதர்த்த விழியைத் துதிக்க வல்லார்?

**குறிப்பு.** கடை கவினென்னும் அடையடுத்து நின்றது.

மேற்காதில் இடப்பட்டு விற்போல் வளைந்து குழைவு பெற்றிருக்கின்றவதனல் அவ்வணியைக் குழை என்றும், அது தங்கி இருக்கும் இடம் எவ்விடமோ என்று ஐயுருமல் அறியும்படிக்கு 'கருங்குழனுதற்கட் பின்னற் கவின்கடைக் கபோலந் தாழ்ந்த வருங் குழை' என்றும் கூறினர்.

மருங்கு-கடைக்குறை விகாரம். 'மருங்கில் பொற்றிரு' எனவே அம் மருங்குல் மிகச் சிறிது என்பதாயிற்று.

இதனுள், பல உவமை வந்தும் அவ்வுவமை தோறும் உவமையுருபு புணராது முடிவின்கண் ஓரிடத்துப் புணர்த்திய வதனால், ஒருவயிற் போலியுவமை என்னும் அலங்காரங் காண்க.

இப் பதினொரு கவியும் கண்ணின் வர்ணனை கூறின. (௬௭)

தோகைநின் கபோலஞ் சார்ந்த
துணைநிழற் சுவடுந் தோடு
மாகவிவ் வுருளை நான்கி
னனன விரதம் வாய்த்தே
வேகநன் புடவி வட்டத்
திருசுட ராழித் திண்டேர்ப்
பாகரைப் பொருது மாரன்
பழம்பகை தீரப் பெற்றான்.

**உரை.** மயில்போன்றவளே, நின்னுடைய இரண்டு கபோலத்திற் சார்ந்த தோட்டினால் தோன்றிய நிழற்சுவடும் அத் தோடுமாக இங்ஙனங் கூறிய உருளை நான்கினையுடைய உனது முகமாகிய தேர் கிடைத்தபடியினாலோ சந்திர சூரியர் என்னும் இருசுடராகிய இரண்டு உருளையைப் பூண்ட ஒன்றுபட் டிருக்கின்ற நல்ல பூமி வட்டமாகிய திண்ணிய தேரையுடைய பாகரென்னுஞ் சங்கரரை இக் காலத்தில் பொருது மன்மதன் தன்னை நெற்றிக்கண்ணால் எரித்த பழைய பகையைத் தீரப்பெற்றான்.

**குறிப்பு.** சங்கரர் திரிபுரத்தை எரிக்கப் போம்பொழுது இருசுடரை உருளையாகப் பூட்டிப் பூமியைத் தேராகப் பண்ணி நடத்தலால், 'ஏகநன் புடவி வட்டத் திருசுட ராழித் திண்டேர்ப் பாகர்'

என்றும், கபோலங் கண்ணாடிபோலிருந்து தோட்டினிழலைக் காட்டலால் 'கபோலஞ் சார்ந்த துணைநிழற் சுவடு' என்றும் கூறினர்.

இதனுள், தோடும் தோட்டினிழலும் முகமும் முகமேற் கவித்த முடியும் தேர்போலிருத்தலின், அதனைத் தேராக உருவகஞ் செய்து அதனை ஏதுவாக எடுத்து உரைத்தமையால், உருவகவேது என்னும் அலங்காரங் காண்க. (௫அ)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

வேரி நாண்ம லர்க்குள் வாணி
விலையில் பாட லமுதெலாஞ்
சேர மாம டந்தை நின்செ
விக்கு ணவ ருத்தவே
யார மாலை முடிய சைப்ப
வாடி யெற்று குண்டலம்
பூரை பூரை யென்ற சொற்பொ
லிந்த வோசை பெற்றதே.

உரை. பெருமையோடும் கூடிய மடந்தைப் பருவத்தை யுடையவளே, நறுநாற்றத்தையுடைய நாட்கொண் டவிழ்ந்த தாமரைமலரின் கணுள்ள கலைமகளானவள் தன்னுடைய விலையில்லாத பாட்டாகிய அமுதமெல்லாம் ஒருமிக்க நின்செவிக்கு உணவாக ஊட்ட அதனால் முத்து மாலையை யுடைய உன்முடி அசைப்ப அதனால் ஒன்றோடு ஒன்று தாக்கிய குண்டலங்கள் பூரை பூரை என்ற சொற்போல பொலிந்த ஓசையைப் பெற்றது.

குறிப்பு. 'மாமடந்தை' என்பதற்கு மாமரத்தின்கீழ் இருக்கும் மடந்தை என்று பொருள் உரைப்பினும், 'பூரை பூரை யென்ற சொற் பொலிந்த வோசை பெற்றது' என்பதற்குப் பூரைபூரை என்ற சொல்லாகிய பொலிந்த ஓசையைப் பெற்றது என்று பொருளுரைப்பினும் அமையும்.

ஆரமாலை கழுத்தினதாக இருப்ப முடியினதாகக் கூறியது கழுத்தோடி கூடி முடி அசைத்தலால் என்க.

பூரை பூரை என்பது போதும் போதும் என்பதாம்.

சேர என்பது ஒருமிக்க என்பதாம்.

"மறைவழி யொழுகா மன்னவன் வாழும்
பழிநாட் டார்ந்த பாவம் போலச்
சேர மறைத்த கூரிரு ணெடுநாள்"

என்றார் பிறரும்.

குவ்வென்னும் நான்கனுருபை ஏழனுருபாகக் கொள்க.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க.

இவ்விரண்டு கவியும் காதின் வர்ணனை கூறின. (ருகூ)

இமய மன்னன் மரபில் வெற்றி
யிடப தாகை யனையவென்
னமலை யுன்றன் வதன துண்ட
வணிசி றந்த மணியையோ
விமல மன்னு கவிஞர் முத்தை
வெற்பில் வல்லி யலர்வதோர்
கமல மன்னு குமிழ ளித்தல்
கண்ட தல்ல வென்பதே.

**உரை.** இமயமலை யரசனுடைய மரபில் வெற்றி எழுதிய கொடி போன்ற என்னுடைய அமலையே, உன்னுடைய முகத்திலே தோன்றிய மூக்கிலே அணியாகச்சிறந்த மணியைத்தானோ மனத்தில் அழுக்கின்மை நிலைபெற்ற கவிஞரானவர்கள் மலையில் இருக்கின்ற வல்லி அலர்வதாகிய ஓர் கமலமலரிடத்து நிலைபெற்ற குமிழம்பூவானது முத்தினை ஈனுதல் உலகத்தில் கண்டதல்ல என்று சொல்வது?

குறிப்பு. முகத்தையும் முகத்தின்மேல் இருக்கின்ற மூக்கையும் கமலமலரும் கமலமலர்மேல் இருக்கின்ற குமிழம்பூவுமாகக் கூறினார்.

ஒகாரம் - வினா.

இதனுள், பொருளதிசயம் என்னும் அலங்காரங் காண்க.

இது மூக்கின் வர்ணனை கூறியது. (௬0)

இறைவி நின்னி தழ்ச்சி வப்பி
யற்கை யித்தொ டிணைசொன
னிறைகொள் கொவ்வை யிந்நி றத்தி
னீழல் பெற்று விம்பமா
யுறைதல் கொண்டு நாணு மற்றொ
ருவமை யில்லை யுண்டெனு
வறைக டற்று கிர்ப்ப ழுக்கி
னன்று சொல்வ னளியனே.

உரை. உலகுக்கெல்லாம் இறைவியே, நின்னுடைய வாயிதழினுடைய சிவப்பு இயற்கையாதலினால் இவ்விதழுடன் பருவத்தினால் வரும் சிவப்பைச் செயற்கையாயுடைய கொவ்வைப்பழத்தை ஒப்பாகச் சொன்னால், முதிர்ச்சியைக்கொண்ட அக் கொவ்வையானது இவ் விதழினுடைய நிறத்தின் ஒளிபெற்று விம்பமென்னும் பெயரையுடைத்தாய்த் தான் உறைதலை உட்கொண்டு நாணும், அஃது அப்படியாகலால், உலகினிடத்து வேறொரு உவமை அதற்கு இல்லை, திரை ஒன்றோடொன்று அறைகின்ற கடலினிடத்துள்ள பவளமானது பழங்களைப் பழுக்கில் அன்றைக்கு உவமை உண்டென்று சொல்வேன் அளியன்.

குறிப்பு. 'உறைதல் கண்டு நாணும்' என்று பாடம் உரைப்பாரும் உளர்.

ஓர் பொருளினது காந்தி ஓர் பொருளில் வந்து பத்தி பாய்தலை விம்பமென்பர், அதனால் 'விம்பமாய்' என்றும், கொவ்வைப்பழம் தலை கீழிட்டிருத்தலால் 'நாணும்' என்றும் கூறினர்.

பவளம் பழுப்பதின்மையால், உவமை எக் காலத்தும் இல்லை என்பது பெறப்பட்டது.

இதனுள், பழுக்குஞ் செயலில்லாத பவளக்கொடி ஒரு காலத்திற் பழுக்குமாயின் அப் பழத்தை அப் பொழுது ஒப்பாகச் சொல்வேன் என்றமையால், அற்புத வுவமை என்னும் அலங்காரம் காண்க.

இது இதழின் வர்ணனை கூறியது. (சுக)

அன்பு முற்றிவடி வாய வம்மைநின
தான னத்துமதி நகைநிலா
நன்பு றத்தமுத மொழுகு மாமதுர
நறைகொள் சீதள மயின்றவா
யின்பு ளிப்பலது வட்டு ருதினியெ
னத்தெ விட்டியசகோரம்வான்
முன்ப ரப்புநில வுண்ணு மா லுனது
மூர லுக்குநிகர் மூரலே.

உரை. அன்பானது முதிர்ந்து ஓர் வடிவாகிய தாயே, உனது முகமாகிய மதியின்கண் இருக்கின்ற நகையிலே பிறந்த நிலாவினிடத்து ஒழுகாநின்ற அமுதத்திலே மிக்க மதுரத்தையும் மணத்தையும் உட்கொண்ட சீதளத்தையும் உண்ட நம்முடைய வாய் இனி இன்புளிப்பை உண்டாலல்லது உவட்டாதெனத் தெவிட்டும்படி சகோரப்புட்கள் வானில் இருந்து முன்னாகப் பரப்புகின்ற சந்திரனுடைய நிலவை உண்ணும், அதனால் உன்னுடைய மூரலுக்கு வேறொன்றும் ஒப்பின்மையால் அம் மூரலே நிகர்.

குறிப்பு. தெவிட்டிய என்பது செய்யிய என்னும் வினையெச்சம்.

நன் என்பது புறத்துக்கு அடையாக நின்றது.

நகைநிலவை உண்ட சகோரப் புட்களுக்கு வானிடத்து மதி நிலவானது தித்தித்த புளிப்பாய் இருத்தலால், தெவிட்டும்படி சகோரம் வான்மூன் பரப்பு நிலவுண்ணும் என்றார்.

இதனுள், முகமதியில் இருக்கின்ற நகைநிலாவாகிய பொருள் வான் மதியில் இருக்கும் நிலவினும் மேம்பட்டதென்று உவமை கூறி மறுத்து, அப் பொருடன்னையே உவமையாக உரைத்தமையால், பொது நீங்குவமை என்னும் அலங்காரம் காண்க.

இது நகையின் வர்ணனை கூறியது. (௬௨)

**வி**ள்ள நாவுரை யெழுந்தொ றுந்தலைவர்
வீரமும் புகழு மழகுமே
தெள்ளு பாடன்ம துரம்ப ழுத்தனைய
செய்ய கேழொளி வனப்பினு
லள்ளன் மாமலரை விட்டு வாணியுன
தருண நாவுறைய வெள்ளையா
யுள்ள மேனியுமெ னம்மை நீயருள
வுன்னி றம்பெறுவ தொத்ததே.

உரை. என்னுடைய தாயே, மொழிகளை மொழியும்படிக்கு உன்னுடைய நா உரை யெழுந்தோறும் உன் தலைவராகிய சங்கருடைய வீரமும் புகழும் அழகுமே சொல்லும் பாடலினது மதுரம் பழுத்தாற் போன்ற சிவந்த நிறத்தின் ஒளி வனப்பினாலே சேற்றிற் பிறந்த பெரிய வெண்டாமரை மலரை விட்டுக் கலைமகளானவள் உன்னுடைய சிவந்த நாவின்கண் உறைய அவளுடைய வெள்ளையாயுள்ள மேனியும் நீ அருளுதலினாலே உன்னுடைய மெய்யின் நிறத்தைப் பெறுவதாகிய மாணிக்க நிறத்தை ஒத்தது.

குறிப்பு. தெள்ளுதல் ஈண்டுச் சொல்லுதல் என நின்றது.

பாட்டினது வனப்பினுல் எனக் கூட்டுக.

நாவினுடைய சிவப்புநிறம் வெள்ளை மேனியிற் பரத்தலால், 'உன்னி றம்பெறுவ தொத்தது' என்றார்.

ஏகாரம் - தேற்றம்.

இதனுள், அதிசயவுவமை என்னும் அலங்காரங் காண்க. (சுஅ)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

அற்றையருட் சிவசேடஞ் சண்டனுண வதுபொறு
தாவ நீரக்
கற்றைமலர்க் குழலுமைநின் கருப்பூர சகலமதிச்
சகலம் போல
வுற்றதிருத் தம்பலத்தி னொருசகல மேனுமினி
துண்டு வாழப்
பெற்றிலரே லமரரெனும் பெயர்பெறவு மிருந்தனரோ
பிழைப்பில் விண்ணோர்.

உரை. கற்றையாக இருக்கின்ற மலர்பொருந்திய குழலையுடைய உமையே, அருளையுடைய சிவன் நாடோறும் உண்டு மிகுந்த சேடத்தைச் சண்டேசுரன் உண்ண அதனை மனத்தில் பொருத ஆவல் தீரும்படிக்கு மதித்துண்டம் போலக் கருப்பூரத் துண்டமுற்ற அழகையுடைய உனது தம்பலத்தில் பொருந்திய ஒரு துண்டமாயினும் இனிதாக உண்டு வாழப்பெற்றிலரானல்; அமரரென்று சொல்லும் பெயரைப்பெறவும் இருந்தனரோ இக் காலத்திற் சாதல் இல்லாத விண்ணோர்?

குறிப்பு. இக் காலத்திற் சாதல் இல்லாத விண்ணோர் எனவே, முற் காலத்திற சாதலையுடைய விண்ணோர் எனவாயிற்று,

அமரரென்னும் பெயர்பெறவு மிருந்தனரோ என்பதனால் அக்காலமென்பது வருவிக்கப் பட்டது.

கற்றை என்பதனை மலருக்கு அடையாகக் கொள்ளாமல் குழலுக்கு அடையாகக் கொள்க.

தாம்பூலமென்னும் வடமொழி தமிழ்மொழியாய்த் தம்பலமெனத் திரிந்தது. "ஊருணி யொத்த பொதுவாய்த் தம்பலம்" என்றார் பிறரும்.

மரிப்பில்லாதவர்க்கு அமரரென்று பெயராகலால், 'அமரரென்னும் பெயர் பெறவு மிருந்தனரோ' என்றார்.

சகலம் - துண்டம்.

அன்று என்பது பதப்புணர்ச்சியின்கண் அற்றை எனலாய் ஈண்டு நாடோறும் என்று பொருள்கொள நின்றது.

பொருத ஆவல் பொருதாவலெனக் கடைக்குறை விகாரமாயிற்று.

உம்மைகள் இரண்டும் சிறப்பு.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள், பண்புவமை என்னும் அலங்காரமும், பொருளேது என்னும் அலங்காரமும் காண்க. (கூச)

பசுத்தமலர்க் கொடிகருணை பழுத்தனைய
    கொம்பேநின் பரமர் பொற்றோள்
விசைத்தொழிலைக் கலைவாணி தனிற்பாடிப்
    பாடியவண் மெலிவ தல்லா
லசைத்திலர்பொன் முடியுனது மதுரமொழிக்
    கசைத்தனரென் றதற்கு நாணி
யிசைத்தொழிலைக் கைவிட்டா ளெழில்வீணை
    யுறையிலிட்டா ளேது செய்வாள்.

உரை. மலையரையனுடைய பசுமைபெற்ற கொடிபோல்பவளே, கருணையைப் பழமாகப் பழுத்தது போன்ற கொம்புபோல்பவளே, நின் பரமருடைய பொலிவு பெற்ற தோள் செய்த விசயத் தொழிலைக் கலைகளையுடைய வாணியானவள் தன்னிலே பாடிப்பாடி அங்கு மெலிவதே யல்லாமல் பொன்முடியை ஒருகாலும் அசைத்திலர், அவ்வாறு பாடினதும் அன்று நினது மதுரமொழிக்கே அசைத்தன ரென்று அதற்கு அவள் நாணத்தை அடைந்து இசைத் தொழிலை மெல்லக் கழியவிட்டாள், எழிலையுடைய வீணையைக் கழற்றியிருந்த உறையில் இட்டாள், இதற்கு எதுசெய்வாள்?

குறிப்பு. மதுரமொழியாவது வாணிபாடும் பாட்டைக்கேட்டு நன்றாயிற்று என்னும் மொழி.

பழுத்த அனைய என்பது பழுத்தனைய எனக் கடைக்குறைந்து நின்றது.

"ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான"

என்பது சொண்டு முடி என்னும் இறுதியின்கண் இரண்டாம் வேற்றுமையாகலால் தொகைப்பட்டு நின்றது.

இதனுள், துணிவதிசயம் என்னும் அலங்காரம் காண்க.

இம் மூன்று கவியும் வாயின் வர்ணனை கூறின. (சுசு)

மகவாசை யாலிமய மலையரையன் மலர்க்கைதொட
மனத்து என்பு
புகவாசை யாலிறைவன் கரத்தேந்தப் பொலிவுறுநின்
சிபுகம் போற்றின்
முகவாசி யரன்படிமக் கலம்பார்க்க விட்டமுகிழ்க்
காம்பு போலுஞ்
சகவாழ்வை யிகழ்ந்திதயந் தனித்தவர்தந் தவக்கொழுந்து
தழைத்த கொம்பே.

**உரை.** உலக வாழ்வை நிந்தித்து ஒருமித்த மனத்தையுடையவர் செய்யும் தவமாகிய கொழுந்து படர்ந்து தழைத்த கொம்புபோன்றவளே, மகவாசையினலே முத்தங்கொள்ளும்படிக்கு இமயமலையரசன் மலர்போலுந் தன் கையால் தொட உன்மேல் வைத்த அன்பு தம்முடைய மனத்துட் புக அதரபானஞ் செய்யவேண்டும் ஆசையினல் இறைவராகிய பரமர் கரத்தால் ஏந்தப் பொலிவுறுகின்ற நின் சிபுகத்தைப் புகழ்ந்து சொல்லின், அப் பரமர் தமது முகச்செவ்வியைக் கண்ணுடியிற் பார்க்கும்படி அதற்கு மூகிழாக இட்ட காம்பு போலும்.

**குறிப்பு.** மலையரசன் மலையுருவமாக இருக்கவே கை வருவித்துச் சொல்லவேண்டியதனல், கைக்கு மலர் உவமையாய் நின்றது. "திகழ்மணிக் கோபுரந் திங்கள் வாண்முகம்" என்ருர் பிறரும்.

தவஞ்செய்தற்கு இடையூறு வாராமல் காத்து நிறைவேற்றலால் 'சகவாழ்வை யிகழ்ந்திதயந் தனித்தவர்தந் தவக்கொழுந்து தழைத்த கொம்பே' என்ருர்.

இதனுள், ஒருவயிற் போலியுவமை என்னும் அலங்காரம் காண்க.

இது சிபுக வர்ணனை கூறியது. (சுசு)

வயங்குறுநின் றரளவட மான்மதச்சே றளையமது
மத்தர் மேனி
முயங்குதொறு மெழுபுளக முட்பொதிந்த பசுங்கமுத்து
முகமுங் கண்டா
லியங்குபுனற் கருஞ்சேற்றி னெழும்வலைய முள்ளரைத்தா
ளீன்ற கஞ்சம்
பயம்புகுதல் கடனன்றே மாற்றிலாப் பசுமையொளி
பழுத்த பொன்னே.

உரை. மாற்று இத்துணை யென்னும் அளவில்லாத பசுமை யொளியைப் பழமாகப் பழுத்த பொன் போன்றவளே, ஒளிர்கின்ற நின்னுடைய முத்துவடமானது கழுத்தினும் முலையினும் பூசிய மான்மதமாகிய சேற்றிலே புரள, மதுமத்தராகிய உன் கணவருடைய மெய்யை முயங்குந்தோறும் எழாநின்ற புளகத்தினால் உரோமச் சிலிர்ப்பாகிய முட்செறிந்த பச்சென்ற கழுத்தும் அதன்மேல் இருக்கின்ற முகமும் கண்டால், இயங்கும் புனலோடுங் கூடிய கரிய சேற்றிலே புரண்டு எழும் வெள்ளிய வலயத்தையும் முள்ளை அரையிலேயுடைய தாளையும் ஈன்ற தாமரையானது அச்சத்தை அடைதல் கடனன்றோ? கடனாம்.

குறிப்பு. முத்துவடமும் மான்மதச்சேறும் உரோமச்சிலிர்ப்பும் கழுத்தும் முகமும் என்பனவற்றிற்கு மாறுபாடாக முறையே வலயமும் கருஞ்சேறும் முள்ளும் தாளும் பூவும் வருவித்துக் கூறினர்.

பயம் புகுதல் என்பதனால் நீரின்கட்புகுதல் என அதன்றன்மைத்தொழில் கூறியவாறுங் கொள்க.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள், தாமரையைச் சிறுமைப்படுத்தித் தாமரைக்கு ஒப்புடைத்தாகிய முகத்தைச் சாதியினாற் பெருமைப்படுத்திக் கூறியதனால் சாதி வேற்றுமை யென்னும் அலங்காரம் காண்க. (௬௭)

செந்திருநின் றிருமணத்திற் சேர்ந்தசர
மூன்றழுந்தித் திகழ்வ தென்கோ
மந்தரமத் திமதார மூவகைநா
தமுமெல்லை வகுத்த தென்கோ
கொந்திரையுந் துணைர்ப்பூகங் கொழுத்தபசுங்
கழுத்தின்வரைக் குறிகண் மூன்று
மிந்திரையுஞ் சயமகளுங் கலைமாதும்
புகழ்வதல்லால் யானென் சொல்வேன்.

உரை. சிவந்த அழகினையுடையவளே, மணத்தினால் வண்டு வந்து ஆரவாரஞ் செய்யும் பூம்பாளையையுடைய கமுகுபோலுங் கொழுத்த பச்சென்ற கழுத்தினிடத் திரேகையாகிய குறிகள் மூன்றையும் உன்னுடைய திருமணத்தில் ஒன்றோடொன்று சேர்ந்த பொற்சர மூன்றும் அழுந்தப்பட்டுத் திகழ்வதென்று சொல்வேனோ, அஃதொழிந்து மந்தரம் மத்திமம் தாரம் என்னும் மூவகை ஓசைக்கும் எல்லை வகுத்ததென்று சொல்வேனோ, அவற்றை அறிந்து திருமகளும் சயமகளும் கலைமகளும் இன்னதென்று புகழ்வதல்லாமல் யான் ஏதென்று சொல்வேன்?

குறிப்பு. உத்தர பூமியிலே மணஞ்செய்யும்பொழுது மூன்று பொற்கயிற்றினால் செய்த ஓரணி கழுத்திற் பூட்டுவார்கள், அதுபற்றித் 'திருமணத்திற் சேர்ந்தசர மூன்றழுந்தித் திகழ்வதென்கோ' என்றும், தேவி சங்கீத வித்தையிலே வல்லவள் ஆதலால் அதுவெல்லாம் இம் மூன்றிசையிலே நடப்பது கருதி 'மந்தர மத்திம தார மூவகைநா தமுமெல்லை வகுத்த தென்கோ' என்றும் கூறினர்.

ஓகாரங்கள் - வினா.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரங் காண்க.

இவ்விரண்டு கவியும் கழுத்தின் வர்ணனை கூறின. (சூ-அ)

முன்னமொரு தலைசினவுன் முதல்வரா லிழந்தவயன்
முகங்க ளான்கா
னன்னழகுக் கேற்றபசுங் கழைமணித்தோ ளொருநான்கும்
வழுத்து கின்றா
னின்னமொரு சிற்றமெழுந் தரிதலையை யெனினுமிவ
டடமென் றோளைச்
சொன்னதலைக் கழிவிலையென் றதிற்றுணிந்த துணிவன்றோ
சுருதி வாழ்வே.

உரை. சுருதியில் வாழ்கின்றவளே, உன்னுடைய முதல்வரிடத்து இன்னும் ஒருகால் சினமெழுந்து அரிந்து விடு தலையை என்று சொல்லினும் இவளுடைய பெரிய மெல்லிய தோளைப் புகழ்ந்து சொன்ன தலைக்கு அழிவில்லையென்று அப் பயத்தினின்று துணிந்த துணிவினால், தன்மேலே சினந்த அம் முதல்வராலே முற்காலத்தில் ஒரு தலையை இழந்த அயனானவன் தன்னுடைய முகங்கள் நான்கானும் உன்னுடைய அழகுக்கு ஏற்ற பசுங்கழை போலும் அழகையுடைய தோள் ஒரு நான்கும் வழுத்துகின்றான்.

குறிப்பு. பிற உறுப்புக்கள் எல்லாம் இருக்கத் தோள்களை வழுத்துவது அபயத்தைத் தருவதனால்.

மூன்றும் வேற்றுமை விகாரத்தாற் றொக்கது.

உம்மை - எதிர்மறை.

அன்றும் ஓவும் அசை.

இதனுள், குணவேது வென்னும் அலங்காரம் காண்க.

இது தோளின் வர்ணனை கூறியது. (கூகூ)

திருமகடன் சீறடியாற் றுவண்டுமெதிற் செம்பஞ்சாற்
செங்கேழ் பெற்று
மருமுளரி யெழில்படைத்த திதுவோநம் மியற்கையெதிர்
மலர்வ தென்றே
யிருகரமு நகைத்தநகை யொளியையுன தெழிலுகிரென்
றிறைஞ்சி நாளு
மருமறைகள் வழுத்துகின்ற ததிசயமோ பேதைமையோ
வன்போ வம்மே.

உரை. தாயே, திருமகளுடைய சிறிய அடியினால் துவண்டும் அவ்வடியில் சூட்டிய செம்பஞ்சினால் சிவந்த நிறத்தைப்பெற்றும் இக்

காரணங்கொண்டு மணத்தையுடைய தாமரை அழகு படைத்தது, இதுவோ நம்மியற்கை அழகெதிரே நின்று மலர்வதென்று நோக்கி, உன்னுடைய இரண்டு கைகளும் நகைத்த நகையை உனது அழகிய நகமென்று வணங்கி நாடோறும் அரியவேதங்கள் வழுத்துகின்றது அதிசயத்தினலோ? பேதைமையினலோ? அன்பினலோ? எனக்கு அறியப்படுவதில்லை, நீ சொல்வாயாக.

குறிப்பு. இதுவோ என்பதனுள் ஒகாரம் மந்தாரமலர் பாரிசாத மலர் முதலாகிய மலரினின்றும் பிரிக்கப்பட்டு இழிவுதோன்ற நின்றதனல், பிரிநிலை.

ஒழிந்த ஒகாரங்கள் - வினு.

இதனுள், நகங்கள் விளங்குதலாகிய இயல்பினை ஒழித்து அவை நகைத்த நகை என்று கவி கருதிய அதன்மேல் ஏற்றிக் கூறுதலானும், நகமல்ல என்று உண்மையை மறுத்தலானும், தற்குறிப்பேற்றவவநுதி என்னும் அலங்காரம் காண்க.

இது கையின் வர்ணனை கூறியது. (எ0)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

நித்தரொரு பக்கமயி னிற்களிறுன் வட்டமுலை
நிற்குமெழி லிற்ற னதுசிர்
மத்தகமெ னத்தனில யிர்த்தொருக ரத்தைமுடி
வைத்துறவு றத்த டவுமான்
முத்தமுலை செப்புவதெ னக்களிறு பிற்குமரன்
முற்புதல்வர் துய்த்த வமுதா
லத்தலைமை பெற்றனர திற்றிவலை கிட்டினுமெ
னற்பவுயிர் முத்தி பெறுமே.

உரை. நித்தருடைய ஓர் பக்கத்தில் இருக்கின்ற மயில்போன்றவளே, உன்னுடைய மைந்தனகிய களிற்றுமுகத்தையுடையவன் நின்

னுடைய வட்டமுலை இறுமாந்து நிற்கும் அழகினாலே தனது அழகிய மத்தகம் உன் மார்பிலே வந்ததோ என்று தன்னிலே ஐயுற்று ஒப்ப ற்ற புழைக்கையைத் தன்முடிமேலே வைத்து ஊறவுறத்தடவும், அத னால் முத்துவடத்தையுடைய முலை எழுச்சியை ஒருவர் புகழ்ந்து எவ்வாறு முடிவது? அக் களிற்று முகனும் பின் பிறந்த குமரனுமாகிய புதல்வர் முற்காலத்திலே உண்ட அமுதமயமாய் இருக்கின்ற பாலி னாலே எக் காலமும் பிள்ளையார் என்றுசொல்லும் அத் தலைமையைப் பெற்றனர், அதிலே ஓர் திவலை கிட்டினும் என் சிறிய உயிர் முத்தி யைப் பெறும்.

குறிப்பு உம்மை - சிறப்பு.

ஆல் - அசை.

இதனுள், திரிபதிசயம் என்னும் அலங்காரங் காண்க. (எக)

முக்கணிறை வற்குமயன் முற்றவெழின் முற்றுமுலை
முட்டியசு ரப்பொ ழுகுபான்
மக்களிரு வர்க்கருள வக்களிறு மிக்குகனு
மட்டிளமை முற்று கிலரா
லக்கடலு தித்தவமு தத்தினையெ டுத்ததில
டைத்திருகண் முத்தி ரையின்வாழ்
செக்கர்மணி மெய்க்கலச மத்தனையுன் வட்டமுலை
செப்பலம லைப்பு தல்வியே.

**உரை.** மலையரசன் புதல்வியே, மூன்று கண்ணினையுடைய இறை வனுக்கு ஆசை மயக்கம் முதிர அழகு முதிரும் உன்னுடைய முலையி னிடத்து நிறைந்த சுரப்பினின்றும் ஒழுகாநின்ற பாலை மக்களாகிய இருவர்க்கும் கொடுக்க, அக் களிற்று முகனும் இக் குகனும் மட்டுப் பட்ட இளமை நீங்கி முற்றுகிலர், அதனால் பாற்கடல் உதித்த அமு

தத்தினை எடுத்து அதனுள்ளே அடைத்து இரு கண்ணாகிய முத்தி ரையினால் அழியாமல் வாழப்பட்ட சிவப்பையுடைய மாணிக்கக்கலச முழுதும் உன்னுடைய வட்டமுலை, அதனை யாவரும் செப்பென்று சொல்வதன்று.

குறிப்பு. மெய் - கலசத்துக்கு அடையாய் நின்றது.

உம்மை எஞ்சி நின்றது.

அகர இகரச் சுட்டுக்கண் முறையே முற்பிறப்பையும் பிற்பிறப் பையும் உணர்த்தின.

மற்று ஓகாரச் சுட்டு உவர்க்கடலை ஒழிக்க நின்றது.

முலையில் கண்ணிருப்பதுகருதி, 'இருகண் முத்திரையில் வாழ் செக்கர்மணி மெய்க்கலசம்' என்றும், குழந்தைப் பருவ நீக்கவேண்டி 'மட்டிளமை' என்றும் கூறினார்.

இதனுள், தற்குறிப்பேற்ற வவநுதி என்னும் அலங்காரம் தோன் றுகின்றது. (எஉ)

கொற்ற வாரண முகம கன்பொரு
குஞ்ச ரானன நிருதனை,
ரிற்ற கோடுதி ரார மாலிகை
யிதழ்ம ணிப்ரபை தழையவே
பெற்ற பாகபி னாக பாணிப்ர
தாப மோடணை புகழென,
வுற்ற தாயினு முனது பொற்றன
முரைபடா நிறை செல்வியே.'

உரை. நிறைந்த செல்வத்தையுடையவளே, கொற்றத்தையுடைய யானை முகனாகிய உன்னுடைய மகன் சென்று நெருக்கிப் பொரப்

பட்ட கயமுகாசுரனுடைய ஒடியப்பட்ட கோடானது உதிர்த்த முத்தினல் செய்த உனது மார்பில் தங்கும் மாலையினிடத்து வாயின் இதழாகிய மாணிக்க ஒளிவந்து தழையவே, அச் சிவப்பும் வெளுப்பும் உன்னுடைய பாகத்திலே பெற்ற பிநாகபாணியினுடைய பிரதாபமுடன் புகழென உற்றதனல் இத் தன்மையுடைய தென்று சொல்வதாயினும், உனது பொலிவு பெற்ற முலையின் வளமை சொல்ல முடியாது.

குறிப்பு. கயமுகாசுரனுடைய கோடு ஒடியும்படி போர்செய்து அக் கோடு உதிர்த்த முத்தினல் மாலைசெய்து விநாயகனற் றரப்பட்டுப் புனைந்த மாலை என்க.

பிரதாபம் சிவப்பு, புகழ் வெளுப்பென்பதனல் 'பிரதாபமோடணி புகழெனவுற்றது' என்றார்.

உம்மை – சிறப்பு.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க. (எ௩.)

தருண மங்கலை யுனது சிந்தை
தழைந்த பாலமு தூறின
லருண கொங்கையி லதுபெ ருங்கவி
யலைநெ டுங்கட லாகுமோ
வருண நன்குறு கவுணி யன்சிறு
மதலை யம்புயல் பருகியே
பொருண யம்பெரு கவிதை யென்றொரு
புனித மாரி பொழிந்ததே.

உரை. இளமையாகிய மங்கலத்தை யுடையவளே, சாதிநன்மை உற்ற கவுணிய கோத்திரத்தை யுடைய சம்பந்தனென்று சொல்லப்பட்ட சிறிய மதலையாகிய அழகியமேகம் உண்டு பொருணயம் பெற்ற கவிதையென்று ஒப்புற்ற தூய்மை பொருந்திய மாரியை உலகத்தின்

கட் பொழிந்தது. அதனல், நின்னுடைய சிந்தையினிடத்து நிரம்பிய பாலாகிய அமுது வந்தூறில், சிவப்பையுடைய உன் கொங்கையினிடத்தே அது பெருங்கவியாகிய அலையையுடைய கடலாமோ? நீ சொல்வாயாக.

குறிப்பு. புயல் பருகுவது கடலினிடத்தாகலால் கடலாமோ என்றும், தேவாரமென்னும் பாட்டை யாவரும் கற்க ஓதியவதனல் 'பொருணயம்பெறு கவிதை யென்றொரு புனிதமாரி பொழிந்தது' என்றும் கூறினர்.

ஓகாரம் - வினு.

இதனுள், அதிசயம் பற்றிய சிறப்புருவகமென்னும் அலங்காரம் காண்க.

இந் நான்கு கவியும் முலையின் வர்ணனை கூறின. (எச)

மூல மேநின் மகிழ்நர் கோப
முதுக னற்பொ றுதுவேள்
கோல நாபி மடுவி னிற்கு
ளிப்ப வந்த வெம்மையான்
மேல வாவு தூம ரேகை
வேரெ ழுங்கொ ழுந்தையோ
நீல ரோம ரேகை யென்று
நீணி லங்கு றிப்பதே.

உரை. எல்லாப் பொருட்கும் ஆதியாய் இருக்கின்றவளே, நின்னுடைய கணவரது கோபமாகிய பெரிய கனலைப் பொறுக்கமாட்டாமல் காமனனவன் உன்னுடைய அழகு பொருந்திய நாபியாகிய மடுவில் விழுந்து குளிப்ப அப்பொழுது வெதும்பிய வெம்மையினல் மேற்கொள்ளுந் தூம ரேகையினது வேரூன்றி எழுங் கொழுந்தைத்

தானோ நீல நிறத்தை உடைய உரோமரேகை என்று நீண்ட நிலத்தி லுள்ளார் குறித்துச் சொல்வது?

குறிப்பு. மேல என்பதனுள் அகாரம் - சாரியை.

ஓகாரம் - வினா.

இதனுள், தற்குறிப்பேற்ற வவநுதி என்னும் அலங்காரம் காண்க. (எடு)

முளரி மாதுன் முலையி னோடு
முலைநெ ருக்க விடையில்வான்
வெளியி னீல மோடி யுந்தி
வியன்மு ழைக்கு ணுழையவே
தெளியு நீரில் யமுனை நீவு
சிறுத ரங்க மனையபே
ரொளியின் ஞால மருளு மீது
ரோம ரேகை யென்னவே.

உரை. தாமரையில் இருக்கின்ற மாதே, உன்னுடைய முலையி னோடு முலை நெருக்குண்டு அவற்றிற்கு நடுவே நின்ற ஆகாயமானது வெளியின் வழியே நீல நிறமாக ஓடி உந்தியாகிய விரிவையுடைய முழையினிடத்து உள்ளாக நுழைந்து மறைய யமுனையாற்றில் தெளிந்த நீரிலே நீவுகின்ற நேரிய தரங்கம்போன்ற அதனுடைய பெரிய ஒளியினால் உலகம் உரோமரேகை என்று மருளும்.

குறிப்பு. ஞாலமென்பது ஆகுபெயராய் ஞாலத்து வாழும் உயிரெனவாம்.

நெருக்குண்ட படியினால் ஆகாயம் நீலநிறமாயிற்று.

நான்கனுருபை ஏழனுருபாகக் கொள்க.

இதனுள், மேற்கவியுள் தோன்றிய அலங்காரமே காண்க.

இவ்விரண்டு பாட்டும் உரோமரேகையின் வர்ணனை கூறினை. ()

தூய கங்கை நிலைப டைத்த
சுழித னத்து முகையினு
லாய துங்க ரோம வல்லி
யால வாலம் விரகவே
டைய ரும்பு மோம குண்ட
மிறைவர் செங்க ணிடைவிடா
மேய கஞ்ச மடுவு னுந்தி
வேறு ரைத்தென் விமலையே.

உரை. விமலையே, உன்னுடைய உந்தியானது தூய கங்கை யாறு ஒருபொழுது நீங்காமல் நிலையாகப் படைத்த சுழி, அதுவு மன்றி முலையாகிய முகையைத் தாங்க வேண்டுவதனுல் பிறந்த உரோ மமாகிய வல்லிவளரும் பாத்தி, அதுவு மன்றி எல்லார்க்கும் விரகத் தைத் தரும் காமனுடைய தீ அரும்பும் ஓமகுண்டம், அதுவுமன்றி நின்னிறைவராகிய சங்கருடைய சிவந்த கண்ணுகிய தாமரை இடை விடாது மேவிய மடு, இவையன்றி வேறொன்ருக உரைத்தால், யாது ஒப்புடையது?

குறிப்பு. 'விரகவே டையரும்பு மோமகுண்டம்' எனவே காமன் எல்லாரையும் வெல்வதற்கு ஆகுதிபண்ணும் ஓமகுண்டமாயிற்று.

செய்து என்னும் வாய்பாட்டு விடாது என்னும் எதிர்மறை வினையெச்சம் விடா எனக் கடைக்குறை விகாரமாயது.

ஆலவாலம் - பாத்தி.

அத்துச்சாரியை அல்வழிக்கண் வந்தது.

இதனுள், உருவகதீவகம் என்னும் அலங்காரம் காண்க.

இது உந்தி வர்ணனை கூறியது. (எஎ)

திரைம டந்தை பரவு மங்கை
தனத டம்பொ ருதுநின்
றிரும ருங்கு லறவ ளைந்து
சிறுகி மூவி ரேகையாய்
வரை பிளந்தொ ரிடிக ரைக்கு
வாழ்ம ரத்தொ டொத்ததா
லுரைக டந்து விடுமுன் மற்றொ
ருறுதி தேட வெண்ணுமே.

உரை. நிலமடந்தையானவள் பரவுகின்ற மங்கைப் பருவத்தை யுடையவளே, உன்னுடைய கொங்கையைப் பொறுக்கமாட்டாமல் உனது அழகிய மருங்குலானது மிக வளைந்து சிறுகி மூவிரேகை போல் வரைவரையாய் விட்டு ஓர் இடியும் ஆற்றில் கரையின்கண் வாழ்கின்ற மரத்தோடு ஒத்ததனால் உனக்கு அழிவில்லை என்னும் உரை இறந்துவிடுமுன் பிறிதோர் உறுதிதேட அஃது எண்ணும்.

குறிப்பு. மூவிரேகை - உந்தியின் கீழ் இருக்கும்வரை.

ஓர் கொம்பானது ஒடிய வளையுமளவில் அதன் அரையிலே இரேகை இரேகையாக விடும், அதனால் 'மூவிரேகையாய் வரைபிளந்து' என்றார்.

நான்கனுருபை ஏழனுருபாக் கொள்க.

இதனுள், உவமைத் தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க. (எஅ)

வம்பைத் தொலைத்துதறி யிறுகிக் கனத்திளகி
வருபுடை நெருக்கி வளர்மாக்
கும்பக் கடாக்களிற் றிணையணைய வுனதுமுலை
கொடிதுகொடி தென்று வெருவா

வம்பொற் றனிக்கமல விறைபொரு திடையென
வழுத்துபூ ணெனமு னிவரோ
டும்பர்க்கு முளமருள வொளிகெழுமி ரேகைமூன்
றுலகமோ தெளிவ துமையே.

உரை. உமையே, இறுகி அடிகனத்து மேற் கட்டப்பட்டிருக்கின்ற கச்சைத் தொலைத்து அதனை உதறி இளகி அசையும் பக்கங்களை நெருக்கி வளர்கின்ற பெரிய மத்தகத்தையும் மதத்தையுமுடைய களிற்றைப்போன்ற உனது முலையைக் கொடியது கொடியதென்று வெருவி அழகிய பொன்னிறத்தையுடைய ஒப்பற்ற கமலத்தில் இருக்கின்ற இறையாகிய நான்முகன் இம் முலையை இடை பொறுக்க மாட்டாது என்று அழுத்திய பூணென்று முனிவருடன் தேவருக்கும் உள்ள மருட்சியைத்தர ஒளி பொருந்திய மூன்று இரேகையை உலகத்தில் உள்ளாரோ இன்னதென்று தெளிவது? தெளியமாட்டார்.

குறிப்பு. 'அம்பொற் றனிக்கமலை யிறைபொரு திடையென வழுத்து பூண்' என்று பாடமாயின், திருமகளானவள் சிறிது பொழுதும் இடைபொருது என்று அழுத்திய பூண் என்று பொருளுரைக்க.

களிறு தோற்றப் பொலிவினால் முலைக்கு உவமையாயிற்று. அன்றியும், 'கும்பக்கடாக்களிற் றினையனையவுனது முலை' என்பதற்குக் கடாகளிற்றின் கும்பத்தினையனைய உனது முலை என்று மொழிமாற்றிப் பொருளுரைப்பினும் பொருந்தும்.

உம்மை - சிறப்பு.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள், தொழிலதிசயம் என்னும் அலங்காரமும், திரிபதிசயம் என்னும் அலங்காரமும் காண்க.

இவ்விரண்டு பாட்டும் இடையின் வர்ணனை கூறின. (எகூ)

கொத்துவிரி யலர்சோலை யிமயவெற் பரசன்மெய்க்
குலமலைப் பக்க மெனவா
ழத்தனை விரிந்தவக லத்தொடு பெரும்பார
மடையவுனி தம்ப விடையே
யெத்தனை பெரும்புவன மிற்றுறு மழிவிலை
யிதற்கெனச் சேம நிதிபோல்
வைத்தது பரந்திடங் கொண்டுலகை யிடமற
வருத்தவோ மதுர வமுதே.

உரை. மதுரத்தையுடைய அமுதம் போன்றவளே, கொத்தின் கண் விரிகின்ற அலரைப்பொருந்திய சோலையையுடைய இமயமலை யரசனுடம்பாகிய குலமலையினது பக்கமென வாழ்கின்ற அவ்வளவு விரிந்த விரிவுடனே பெரிய பாரமுழுதும் உன்னுடைய நிதம்பத்தி னிடத்தே எத்தனை பெரிய புவனங்கள் இற்றழியினும் இதற்கு அழி வில்லை என்று சொல்லும் படிக்குச் சேமநிதிபோல வைத்தது, பின்பு பரந்து இடங்கொண்டு உலகை இடமற விரிவினாலும் கனத்தினாலும் வருத்தும் படிக்கோ?

குறிப்பு. உம்மை - சிறப்பு.

ஓகாரம் - வினா.

இதனுள், பொருளதிசயம் என்னும் அலங்காரம் காண்க.

இது நிதம்ப வர்ணனை கூறியது. (அ0)

எண்சீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

பொற்கதலி புறங்காட்டுங் குறங்கால் வேழப்
புழைக்கைகதடிந் துஞ்சிவனைப் பணிந்து தேய்ந்த
வற்கடின முழந்தாளிற் கும்பஞ் சாய்த்து
மணிமருப்பைக் கனதனத்தால் வளைத்து மம்மே

நிற்கடின கோபமம ராமை கண்டோ
நித்தரதன் றெக்குரித்த துடுத்த நேயம்
பிற்கருதி யிவளுறுப்போ டுவமை வீறு
பெற்றதிது வென்னுமிந்தப் பெருமை கண்டோ.

உரை. தாயே, மேருவினிடத்துப் பொன்மயமாய் இருக்கின்ற வாழை அஞ்சிப் புறங் காட்டப்படும் குறங்கினால் யானையினது புழைக்கையைத் தடிந்தும், நின் கணவனாகிய சிவனைப்பணிந்து தேய்ந்த கடினத்தையுடைய வலிய முழந்தாளினால் அதனுடைய மத்தகத்தைச் சாயச் செய்தும், அடி கனத்த முலையினால் மணியையுடைய அதன்மருப்பை வணங்கச் செய்தும் அதன்மேல் நின்னுடைய கடினமாகிய சினம் அமராதிருத்தல் கண்டோ நித்தர் அவ்வியானையின் தோலை உரித்துப் பின்கருதி அதன்தோலை மேற் போர்வையாகச் சூழ்ந்து கொண்ட நேயம்? இவளுடைய உறுப்புடன் தன்னுடைய உறுப்பை உவமையாக உவமிக்கப்படும் உயர்ச்சி பெற்றது இது வென்று பிறர்சொல்லும் இப் பெருமையைக் கண்டோ?

குறிப்பு. பொற்கதலி என்பதற்குப் பொன்னாற் செய்த கதலி என்று பொருள் உரைப்பினும் அமையும்.

உத்தமிகட்கு இயல்பு நித்தமுந் தங்கணவரைப் பணிதலாதலால் 'சிவனைப்பணிந்து' என்றும், யானையினது மத்தகம் கடினமாய் இருத்தலால், அதனைத் தள்ளி நிற்பதற்கு அதனினுங் கடினமாய் இருப்பது வேண்டி, 'தேய்ந்தவற்கடின முழந்தாளிற் கும்பஞ்சாய்த்து' என்றும் கூறினர்.

மதம் மத்தகத்துளிருந்து புறப்படுதலில், 'கும்பஞ்சாய்த்து' என்றும், மருப்பு வளைந்திருப்பதினால், 'வளைத்து' என்றும், அவற்றின் றன்மைத்தொழிலுங் கூறப்பட்டன.

உடுத்தல் - சூழ்ந்து கொள்ளுதல். "கருநீர்க்குண் டகழுடுத்த, பெருநீ ராழித் தொல்லுலகுக்கே" என்றார் பிறரும்.

ஒகாரங்கள் - வினை.

கேசாதிபாத வர்ணனையாக முறையே கூறுகின்றவர் முலையை ஈண்டெடுத்துக் கூறியது தேவியுடைய உறுப்புக்கு உவமைப்பட்டிருந்த யானையினுடைய உறுப்பெல்லாம் சிறுமைப் படுத்தவேண்டி.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க.

இது குறங்கின் வர்ணனையும் முழந்தாள் வர்ணனையும் கூறியது. (அக)

உம்பர்தொழுந் தொறுமகுடச் சாணை தீட்டி
 யொளிருநக நுனைக்கணையோ ரைந்து மைந்துஞ்
செம்பொன்மணிக் கணைக்காலா மிணைப்பொற் றூணி
 சேர்த்தன்றோ சிவன்பகைவே டருகின்று
னம்பொருபத் தளித்தனையின் றன்று போல
 வைங்கணைதொட் டழியினது பழுதென் றன்றோ
வம்பமருங் கனதனப்பொற் றிருவே யுன்றன்
 மனவிரகின் செயலொருவர் மதிப்ப தன்றே.

உரை. கச்சுப்பொருந்துங் கனத்த முலையையும் பொலிவுபெற்ற அழகினையும் உடையாளே, தேவர் வந்து தொழுந்தோறும் அவருடைய மகுடமாகிய சாணையிலே தீட்டி ஒளிருகின்ற நகமாகிய நுனையையுடைய அம்புகள் ஓரைந்தும் ஐந்தும் செம்பொன் போலும் நிறத்தையுடைய அழகு பொருந்திய உன் கணைக்காலாகிய பொன்னாற் செய்த இரண்டு தூணியின்கண் முறையே சேர்த்துச் சிவனிடத்தில் உள்ள பகையைக் காமனானவன் தீர அக் காலத்தில் ஐந்தம்பினைத் தொடுத்து நெற்றிக்கண்ணினால் அழிந்தது போல இக் காலத்தில் ஐந்தம்பினைத் தொடுத்து அழியில் அது பழுதென்று பத்தம்பினைக் கொடுத்தனை யாகலால், உன்னுடைய மனத்திற் கோசரிக்கும் நினைவின் செயலை ஒருவர் இவ்வளவு என்று மதிப்பதன்று.

குறிப்பு. செம்பொன்மணி கிங்கிணி எனினும் அமையும்.

தீருகின்றான் என்னும் வினைமுற்றை வினையெச்ச மாக்குக.

இரண்டிடத்து அன்றும் ஒவும் அசை.

இதனுள், இயைபுருவகம் என்னும் அலங்காரமும், மேற்கூறிய கவியினுள்ளே தோன்றிய அலங்காரமும் காண்க.

இது கணைக்கால் வர்ணனை கூறியது. (அஉ)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

உளமகிழ் மகிழ்நர் சென்னி
யுறுநதி விளக்க மாயோன்
கிளர்முடிப் பதும ராகக்
கேழொளி செம்பஞ் சேய்க்கு
முளரிநின் பதங்கள் வேத
முடியுறப் பதித்த தவ்வா
றெளியவென் றலைமேல் வைக்க
விரங்குவ தென்று தாயே.

உரை. தாயே, மிக்க காமத்தை விளைவிக்கவேண்டி நீ ஊடுத லால் உன்மேல் மனமகிழ்ந் திறைஞ்சும் நின் கணவருடைய முடி யில் உற்ற கங்கையாறனது கழுவி விளக்க நீ கொடுக்கும் பயன் களினால் இறைஞ்சும் திருமாலுடைய அடுக்கடுக்காகக் கிளர்ந்த முடி யில் அழுத்திய மாணிக்க ஒளிநிறமானது ஊட்டிய செம்பஞ்சுக் குழம்பு நிகர்க்கப்படுந் தாமரைபோலும் நின்னுடைய பாதத்தை வேதம் தனது அந்தத்திலே நீங்காமல் பதித்தபடி பதிக்கப்படும் அதனை அவ்வாறு எளிய என்தலைமேல் வைக்க நீ இரங்குவது எப் பொழுது?

குறிப்பு. இதனுள், பண்புவமை என்னும் அலங்காரங் காண்க.

அரியமென் காவி னீபுக்
கசோகினிற் பாத மேற்ற
வுரியநம் பதத்தை யீதோ
வுறுமெனப் பொருது பெம்மா
னெரியுற மரத்தை நோக்கு
மியல்பினைக் கேட்டும் யானுன்
வரிமலர்ப் பாதம் போற்றும்
வளமினி தினிது மாதே.

உரை. மாதே, கிடைத்தற்கு அரிய மெல்லிய தளிர்களையுடைய உனது காவிலே நீ புகுந்து ஓர் அசோக மரத்தின்மேல் உன் பாதத்தை வைக்க யான் பெறுதற்கு உரிய பதத்தை இவ்வசோகமரமோ பெறுமென்று அதனை மனத்திற் பொருமல் சிவனானவன் கண்ணால் எரியுற அம் மரத்தை நோக்கும் முறைமையினைக் கேட்டிருந்தும் யான் வண்டுகள் பரந்த மலர்போலும் உன்னுடைய பாதத்தைப் புகழும் வளம் இனியது இனியது!

குறிப்பு. இனிதினிது என்பது குறிப்புமொழி யாகலால், அது கைப்பது கைப்பது எனவாம்.

வண்டுகள் சிலம்பில் அழுத்திய நீலமணிக்கு உவமை.

பாதிரி முதலாகிய பத்து மரங்களுள் அசோகமரம் நன்மகளிர் பாதம் வைக்க மலரோடு கூடிக் கொம்புதாழ்ந்து நிற்றலால், 'அசோகினிற் பாத மேற்ற' என்றார்.

"நித்தில முலையி னார்தூ நெடுங்கண்ணி னோக்கப் பெற்றுங்
கைத்தலந் தீண்டப் பெற்றுங் கனிந்தன மலர்கள் காண
வைத்தலர் கொய்யத் தாழ்ந்த மரமுயி ரில்லை யென்பார்
பித்தவ ராயிற் பேய்க ளென்றலாற் பேச லாமே."

என்றார் பிறரும்.

ஓகாரம் - பிரிநிலை.

உம்மை - சிறப்பு.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரந் தோன்று கின்றது.

(அச)

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

மறுமட ந்தையை மொழிய நின்பத
மலர்வெ குண்டர னுதலிலோர்
முறைய றைந்திட விழியி லும்பட
முதுப ழம்பகை கருதிவே
ளிறையை வென்றனன் விழியை வென்றன
னெனமு ழங்கிய குரலெனு
தறைசி லம்பெழு மரவ மென்பதெ
னருண மங்கல கமலையே.

உரை. அருண நிறத்தையும் மங்கலத்தையும் உடைய கமலையே, உன்னுடைய கணவனாகிய சிவன் தன்னுடன் நீ ஊடவேண்டி மறு மடந்தையாகிய கங்கையைப் பார்த்துச் சரதமொழியாக மொழிய அப்பொழுது நின்னுடைய பாததாமரை வெகுளுதலோடு கூடி உனது ஊடலைத் தீர்க்கப்பணிந்து கிடக்கின்ற அச் சிவனுதலிலே ஓர் முறை உதைந்திட அஃது அந் நெற்றியினுமன்றி அதனில் இருக் கும் கண்ணினும்பட அக் கண்ணினால் எரியுண்ட பெரிய பழம் பகையைக் கருதி உன் பாதத்தைப் பற்றியிருக்கின்ற காமனைவன் என்னை வெகுண்ட இறைவனை வென்றேன் என்னை எரித்த விழியை வென்றேன் என்று முழங்கிய குரலென்று சொல்லாமல் பாதத்தில் அடிபடும் சிலம்பினின்றும் எழும் ஆரவாரமென்று யாவரும் சொல் வது யாதினைக் கருதி?

குறிப்பு. உம்மை - இறந்ததுதழீஇய எச்ச உம்மை.

இதனுள், தற்குறிப்பேற்ற வவநுதி என்னும் அலங்காரம் காண்க. (அ௫)

இமநெ டுங்கிரி யுலவி யுங்கவி
னெழுநி ரந்தர மலருமே
லமர்பெ ருந்திரு வருளு நின்பத
வருண முண்டக மீனயதோர்
கமல மென்பது பனியில் வெந்திதழ்
கரிய கங்குலின் முகுளமாய்
விமலை யந்திரு மனையெ னும்பெயர்
விளைவ தொன்றல முதல்வியே.

உரை. முதல்வியே, நின்னுடைய பாதமாகிய சிவப்பையுடைய தாமரையானது மேலெங்கும் பரந்து கிடக்கின்ற பனித்திவலைகளை யுடைய நெடிய கிரியினிடத்து உலவியும் அழகு மிகப்படும்; அதுவு மன்றி, எப்பொழுதும் அலர்ந்திருக்கும் தன்மேல் அமர்ந்திருக்கின்ற பெரிய திருவை அடியார்க்குக் கொடுக்கும்; பாததாமரைக்கு நிகரோ ன்று இருப்பதாகிய கமல மென்று சொல்லப்படுவது பனிபடுவத னல் இதழ் வெந்து கரிய இராப்பொழுது முகுளமாய்த் திருவினு டைய மனை என்று சொல்லும் பெயரைத் தரப்படுதலினல் இதுவும் அதுவும் ஒன்றல்ல வேறுபாடாம்.

குறிப்பு. பாததாமரை திருவைக்கொடுக்கும், இது திருவைக் கொடாது தன்னிடத்தே வைத்திருக்கும் என்பது கருதி 'விமலை யந்திரு மனையெ னும்பெயர் விளைவது' என்றார்.

உம்மை - இழிவு சிறப்பு.

இதனுள், வேற்றுமை யுருவகம் என்னும் அலங்காரங் காண்க.()

பஞ்ச முத்தினும் வாடு நின்பத
பங்க யத்திணை யொப்பெனு

விஞ்சை கற்றவர் வன்பு றக்கம
　　டத்தை வீணில்வி யப்பரா
மஞ்ச னப்புய றங்கை நின்வர
　　ரம்மி மீதிலும் வைப்பராம்
வஞ்ச கக்கொடு நெஞ்ச ரத்தனை
　　வல்ல ரல்லர்நி னைக்கினே.

உரை. கறுப்பையுடைய புயல்போன்ற திருமாலுடைய தங்காய், செம்பஞ்சு ஊட்டினும் அது பொருமல் வாடும் நின்னுடைய பாத தாமரை இரண்டிற்கும் ஒப்பென்று அறிவுண்டாதற்கு ஏதுவாகிய வித்தையைக் கற்றவர் வலிய முதுகையுடைய ஆமையை வீணிலே வியந்து சொல்லுவார்; அதுவுமன்றி, நின்னுடைய கணவராகிய சங்கரர் உன்னை மணஞ் செய்த பொழுது அடாத தாமரையை வலிய அம்மி மேலும் எடுத்து வைப்பர்; அதனுல், ஆராயுமிடத்து இவர்கள் வஞ்சகத்தையுடைய கொடிய நெஞ்சினர், அதன் மேன்மைத்தன்மை அறியும் அவ்வளவு வல்லரல்லர்.

குறிப்பு. அஞ்சனப் புயல் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

விரித்தல் விகாரத்தால் வஞ்சம் வஞ்சக மெனவாயிற்று.

உம்மைகள் - இழிவு சிறப்பு.

ஆமென்பன - அசை.

இதனுள், குணவதிசயம் என்னும் அலங்காரங் காண்க. (அஎ)

அற்ற வர்க்கருள் செய்யு மம்மதி
　　னற்பு தப்பத மம்பொனு
டுற்ற வர்க்கருள் பொற்ற ருத்தரு
　　வூட றிந்தில மென்னவே

முற்று பொற்பர மாதர் கைத்தல
முண்ட கங்குவி வெண்ணிலா
நற்றி றத்தொடு நாடி நாடி
நகைக்க வாளுகி ரென்பரே.

உரை. எல்லாப் பற்றையும் ஒருங்கே அற்றவர்க்கு அருளைச் செய்யும் தாயே, கொடுக்கும் தொழிலைச் செய்யும் பொன்னிறத்தையுடைய கற்பக தருவானது அழகிய பொன்னுட்டை உற்ற தேவர்க்குத் தன்னாற் கொடுக்கப் படுவனவற்றைக் கொடுக்க, அது கண்டு நமக்கு எதிராக இது கொடுப்பதனை உட்புகுந்து அறிந்திலேமென்று முற்றுப்பெற்ற அழகையுடைய தெய்வ மகளிரது கைத்தலமாகிய தாமரை குவியச்செய்யும் வெள்ளிய நிலாப்புறப்பட அக் கற்பகத்தருவைச் சிறுமைப்படுத்துகின்ற நல்லதிறத்துடன் நின்னுடைய அதிசயந்தரும் பாதங்களானவை நோக்கி நோக்கி நகைசெய்ய அதனை அப் பாதங்கள் நகைக்கப் படுவதென்று சொல்லாமல் யாவரும் ஒளியையுடைய நகமென்று சொல்வார், அஃது யாதினைக் கருதி?

குறிப்பு. யாதினைக்கருதி என்பது எஞ்சி நின்றது.

அற்றவர் என்பதற்குப் பொருளற்றவரென்று பொருளுரைப்பினும் பொருந்தும்.

இதனுள், தற்குறிப்பேற்ற வவநுதி என்னும் அலங்காரங் காண்க. (அஅ)

செய்ய பஞ்சு குழம்பெ ழும்புனல்
செல்வி நின்பத நல்கவே
துய்ய பங்கய வாணி தம்பல
வூற றுய்த்தசொல் வாணர்போன்
மைய னெஞ்சுறு மூம ருங்கவி
வாண ராகிம லிந்ததான்

மெய்ய டங்கலு மூழ்கு முன்கவி
வீறு நாவில டங்குமோ.

**உரை.** செல்வத்தையுடையவளே, செய்ய பஞ்சு குழம்பக் கரைத்து எழும் புனலை நின்னுடைய பாதமானது வாயினல் உண்ணும்படி கொடுக்க வெள்ளிய தாமரையில் இருக்கின்ற கலைமகளுடைய தம்பல ஊறலை உண்ட சொல்வாணர்போல மயக்கத்தை நெஞ்சிலே உற்ற ஊமரானவரும் கவிவாணராகி மிகுந்தவதனல், உனது மெய்யடங்கலும் நிறைந்திருக்கும் உன்கவியின்மிகை ஒருவர் நாவில் அடங்குமோ? அடங்காது.

குறிப்பு. 'வீறெ ஞவில டங்குமோ' என்று பாட மோதுவாருமுளர்.

பாத சலத்தினல் ஊமருங் கவி வாணராதலால், உடம்பெங்கும் நிறைந்த கவி ஒருவர் நாவில் அடங்காவெனக் கொள்க.

குழம்ப எழும்புனல் குழம்பெழும்புனல் எனக் கடைக்குறை விகாரமாயிற்று.

உம்மை - இழிவு சிறப்பு.

ஓகாரம் - எதிர்மறை.

இதனுள், தொழிலதிசயம் என்னும் அலங்காரமும், கருமவேது என்னும் அலங்காரமும் காண்க. (அகூ)

**கலிவிருத்தம்.**

நாடியுன தற்புத நடைத்தொழில் படிக்கும்
பேடைமட வன்னமொடு பேதநடை கூறு
மாடக மணிப்பரி புரத்தரவ மம்மே
யேடவிழ் மலர்ப்பத மிரைக்குமறை போலும்.

உரை. தாயே, அதிசயத்தைத் தருகின்ற உனது நடைத்தொழிலைக் கருதி அதன் இலக்கணத்தைக் கற்கும் பேடையாகிய மட அன்னங்களோடு நடையின் பேதத்தை இப்படி என்று கூறுநிற்கும் பொன்னாலும் மணியாலும் செய்த பரிபுரத்தினுடைய ஓசையானது தோடவிழ்ந்த மலர்போலும் நினதுபாதம் அவ்வன்னங்களுக்கு உறுதிப்பட அதிர்த்துச் சொல்லுஞ் சொற்போலும்.

குறிப்பு. இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க. (கூ0)

தோகைநின் மலர்ப்பத சுடர்க்குடையும் வெய்யோ
னாகமணி செய்வதொர்க ணாடிவடி வாகு
மோகமதி தானுமது வாகியுன் முகஞ்சேர்
கோகனத மென்னிதய கோகனத மென்னும்.

உரை. மயில்போன்றவளே, நின்னுடைய மலர்போலும் பாதத்தினது சிவந்த சுடருக்கு அஞ்சுகின்ற சூரியன் உன்னுடைய வடிவத்தினது சிவப்பு நிறத்தைப் பெற்றுத் தன்னுடைய வடிவத்தை அழகு செய்வதற்கு ஓர் கண்ணாடியின் வடிவாகும்; அதுவுமன்றி, உன் பாதத்தினது கொடைக்கு அஞ்சி அதனால் மோகத்தையுடைய சந்திரன்றானும் அக் கண்ணாடியின் வடிவாகித் தன்னிடத்து நிழலிடச் சேர்ந்த உன்னுடைய முகமாகிய தாமரையை என்னிதயமாகிய தாமரை என்று சொல்லும்.

குறிப்பு. பாதத்தினது கொடைக்கு அஞ்சுதல் அருத்தாபத்தியால் பெறப்படும். இதற்குக் காரணம் முகம் வேறுபடாது இருத்தலென்பதனால். தேவி முகமலர்ந்து ஈதலை எண்ணிப் பாதத்தினது கொடைக்கு அஞ்சிய சந்திரன் தான் கொடையினால் பாதத்துக்கு ஒப்புடையதாக வேண்டிக் கண்ணாடிவடிவு எடுத்து முகதாமரை தன்னிடத்து நிழலிட எதிரே நின்று அதனைத் தன்னிதயதாமரை என்று சொல்லுமெனக் கொள்க.

சிவந்த காந்தியினால் சூரியனும் கொடையினால் சந்திரனும் உயர்ச்சியையுடையர் என்பது கருதி இவ்வாறு கூறினர்.

"வாரி புடைசூழ்ந்த வையகத்திற் கில்லையாற், சூரியனே போலுஞ் சுடர்" என்றும், "மண்ணக மனைத்து நிறைந்தபல் லுயிர்கட், காயா யமுத மீத லானும்" என்றும் கூறினர் பிறரும்.

இதனுள், தற்குறிப்பேற்றம் என்னும் அலங்காரம் காண்க. ()

அன்பின ரிரப்பதி னிரட்டியருள் செய்யு
நின்பத தருத்துணர் நிறைந்தொளிர்வ னப்பா
மின்பமுறு தேன்முழுகு மென்னிதய வண்டின்
றன்புளக மெய்க்களி தழைக்கவரு டாயே.

உரை. தாயே, உன்னிடத்து அன்புடையார் இரப்பதின் இரட்டையாகிய ஈதலைச்செய்யும் நின்னுடைய பாதமாகிய கற்பக தருவின் பூங்கொத்திலே நிறைந்து ஒளிர்கின்ற அழகாகிய இன்பத்தைத் தருந் தேனிற் சென்று முழுகும் என்னிதயமாகிய வண்டினது புளகமுங் கெடாத களிப்பும் மேன்மேல் அதிகப்பட அருள்வாயாக.

குறிப்பு. தன்னென்பது சாரியை.

இதனுள், இயைபுருவகம் என்னும் அலங்காரமும், ஆர்வமொழி என்னும் அலங்காரமும் காண்க.

இப் பத்துக் கவியும் பாத வர்ணனை கூறின. (கூஉ)

ஓதியிருண் மூரலொளி யுற்றகுழை வாக
மோதுமுலை யற்பவிடை முற்றுமுனி தம்ப
மாதிபர னின்னருடி ரண்டருண மாகு
மாதுநின் மலர்ப்பத மனத்தெழுதி வைத்தேன்.

உரை. எப்பொருட்கும் ஆதியாகிய பரமனுடைய இனிய அருள் ஒன்ருய்த் திரண்டு அருணவடிவாகும் மாதே, முன் கூறப்படும் உன்

னுடைய இருள் பொருந்திய குழலையும், ஒளிபொருந்திய நகையினை யும், குழைவற்ற மெய்யினையும், ஒன்றோடு ஒன்று நெருங்கும் முலையி னையும், சிறிதாகிய இடையினையும், பெருத்த நிதம்பத்தினையும், மலர் போலும் பாதத்தினையும் மறந்துவிடாமல் என் மனத்தின்கண் எழு திவைத்தேன்; அதனால், நீ காத்தருள்.

குறிப்பு. நீ காத்தருள் என்பது எஞ்சிநின்றது.

இதனுள், ஆர்வமொழி என்னும் அலங்காரங் காண்க.

இது உறுப்புக்களின்மே லுண்டாகிய உள்ளன்பு கூறியது. ( )

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

தூயமதி மரகதச்செப் பொளிர்கலையுங்
 களங்கமுநேர் சொல்லுங் காலைக்
காயுமதி தவளகருப் பூரசக
 லத்தொடுகத் தூரி போலு
நீயருந்த வருந்தவவை குறைதொறுமவ்
 விரண்டுமய னிறைத்தல் போலுந்
தேயுமது வளருமது திங்களெளி
 தோவுனது செல்வ மம்மே.

உரை. தாயே, தூயமதியாகிய மரகதச் செப்பிலே ஒளிர்கின்ற சோடச கலையும் அதன் நடுவே இருக்கின்ற களங்கமும் அடைவே இவற்றைச் சொல்லுமிடத்து, ஒளிராநின்ற மிக்க வெளுப்பையு டைய கருப்பூரத் துண்டத்துடன் கத்தூரிபோலும்; அதுவன்றி, அத் திங்களினிடைத் தேயும் அக் கலை பின்பு வளர்வது நீ பழுக்காய் வெற்றிலையுடன் அருந்த அருந்த அவை குறையுந் தோறும் கருப்பூர த்துண்டமும் கத்தூரியும் நான்முகன்கொடுவந்து நிரப்புதல்போலும்; அதனால், எளியதோ உனது செல்வம்?

குறிப்பு. திங்களினிறுதியில் ஏழனுருபாகலால், அது தொகைப்பட்டு நின்றது.

கலையும் களங்கமும் ஒற்றுமைப்பட்டு இருப்பதனுல், அதுவென ஒருமைப்படக் கூறினர்.

தூயமதி - கலைகளைவிட்டு நீங்கி வட்டங்கொண்டிருப்பது.

செப்பென்பது காண்டம்.

ஒகாரம் - எதிர்மறை.

இதனுள், பலவயிற்போலியுவமை என்னும் அலங்காரமும், உதாத்தம் என்னும் அலங்காரமுங் காண்க. (கூச)

கலிநிலைத்துறை.

தேவியு னில்லஞ் சிவனுறை யந்தப் புரமானுல்
யாவ ருனைக்கண் டெய்துவ ரிமையோர் முதலானே
ராவல்கொ டெய்த்துன் வாயிலி லணிமா திகளாலே
மேவிய சித்திப் பேறொடு மீள்வா ரானுரே.

உரை. தேவி, உனது இல்லம் சிவன் உறைகின்ற அந்தப்புரமாதலால், யாவர் உன்னைக்கண்டு கிட்டுவர்? இமையோர் முதலானோர் வந்து உன்னைக் காணவேண்டும் விருப்பங்கொண்டு நெடுநாள் இருந்து இளைத்து உன் வாயிலிற் காத்திருக்கும் அணிமாதி சித்திகளாலே மனத்திற் கருதிய சித்தியைப் பெறுதலுடன் மீள்வாரானுர்.

குறிப்பு. அதனுல் யான் உன்னைக் காண்பதற்கு மிக்க தவஞ் செய்தேன் என்பது பெறப்படும்.

இதனுள், உதாத்தம் என்னும் அலங்காரமும், கருத்தா வேது என்னும் அலங்காரமுங் காண்க.

இவ்விரண்டு கவியும் தேவியுடைய செல்வத்துயர்ச்சி கூறின.()

மூவர்ம கேசன் முடிகொளு மஞ்சத் தெழிலாயு
மேவிய படிகத் தனதொளி வெளிசூழ் திரையாயு
மோவறு செங்கேழ் விம்பம தின்பத் துருவாயும்
பாவைநி னகலா விறையொடு நின்னைப் பணிவாமே.

**உரை.** தெய்வத் தச்சன் செய்யும் பாவைபோன்றவளே, அயன் அரி அரன் என்னும் மூவரும் மகேசனும் கட்டிலுடைய நான்கு முடியினால் தாங்கப்படும் மஞ்சத்தின் வடிவாகவும், அதன்மீது மேவிய படிக நிறம்போலும் தனது ஒளி அதன்வெளி சூழ்ந்த திரையாகவும், அத்திரைமேல் ஒழிவற்ற நின்னுடைய சிவந்தநிறம் பத்திபாய்ந்தநிழல் இருவரும் அனுபவிக்கும் இன்பத்தின் வடிவாகவும் யாம்கருதி, உன்னைவிட்டுப் பிரியாத உன்னிறைவனாகிய சதாசிவனுடன் உன்னைப் பணிவாம்.

**குறிப்பு.** தனதொளி என்றது சதாசிவனுடைய ஒளியை.

ஆயும் என்னும் ஆக்கவும்மையொடு கூடிய செய்தென்னும் வினையெச்சங்களைச் செயவென் னெச்சமாகக் கொள்க.

இன்பத்தி னிறம் சிவப்பாதலால் சதாசிவனுடைய வெள்ளிய நிறமாகிய திரைமே னிழலிட்ட தேவியினது சிவப்புநிறம் இவ்விருவரின்பமும் மிகுந்து உருவமெடுத்ததாகக் கூறினர்.

அதுவென்பது பகுதிப்பொருள் விகுதி.

இது நாடோறும் பணியுங்கால் நினைக்குமாறு கூறியது. (கூசு)

**கலிவிருத்தம்.**

**க**லைமகளும் பொதுமடந்தை கமலையுமற் றவளே
மலைமகணீ கற்புடைய வனிதையெனப் பகருங்
குலமறைக ளெதிர்கொடுநின் குரவினையு மணையா
முலைகுழையப் புணர்வதுநின் முதல்வரல திலையால்.

உரை. மலையரையனுடைய மகளே, கல்விக்கு உரியாரிடத்து இருத்தலால், கலைமகளும் பொதுமடந்தை; அதுவன்றிச் செல்வத்துக்கு உரியாரிடத் திருத்தலால், திருமகளும் பொதுமடந்தை தானே, நின்னுடைய காவில் இருக்கும் குராமரத்தினையும் எதிர்கொண்டு அணையாத உன்முலை குழையும்படி புணர்வது நின்முதல்வர் மெய்யன்றி வேறோர் மெய்யில்லை, அதனால் நின்னைக் குலமறைகள் கற்புடைய வனிதையென்று சொல்லும்.

குறிப்பு. நீ கற்புடைய வனிதை எனவே உலகமனைத்திற்கும் தாயென்றவாறு மாயிற்று.

பாதிரி முதலாகிய பத்துமரங்களுள் குராமரம் நன்மகளிர் அணைய மலரோடு கூடிக் கொம்பு தாழ்ந்துநிற்றலால், சிறப்புமைதோன்றக் 'குரவினையு மணையா முலை' என்றார்.

ஏகாரம் - தேற்றம்.

மற்றும் ஆலும் அசை.

இது கற்புடைமை கூறியது. (கூஎ)

வேதியர்க ளயனுவில் விஞ்சைமக ளென்றுஞ்
சீதரன்றன் மணிமார்பிற் செழுங்கமலை யென்று
நாதரிடத் தரிவையென்று நாட்டுவரெண் ணடங்கா
வாதிபரன் மூலபரை யாமளையுன் மயக்கால்.

உரை. அறிவிற்கு அடங்காத ஆதிபரனுடைய ஆதிபராசத்தியாகிய யாமளையே, உன்னுடைய மாயையினால் வேதியர்கள் அயனுடைய நாவிலே கலைமகளென்றும், திருமாலுடைய மணிமார்பிலே செழுமையையுடைய திருமகளென்றும், சங்கரருடைய இடப்பாகத்தில் உமையென்றும் சொல்வர்.

குறிப்பு. மாயையினால் சொல்வரெனவே, அம் மயக்கத்தை நீங்கி ஆராய்ந்து தெளிவாராயின், உன்னையன்றி வேறொருவரு மில்லையெ ன்பார் என்றவாறாயிற்று.

இது சத்திவடிவெல்லாம் தேவிவடிவே எனக் கூறியது. (கூஅ)

கோச்சகக் கலிப்பா.

அம்மேநின் மெய்ப்பிரிவா மணிமாதி தொழுமழியா
விம்மேனி தம்மேனி யெனத்தெளிந்து பாவிப்பார்
செம்மேனி யரன்வாழ்வுஞ் சிதைவதெனப் புறக்கணித்து
வெம்மேனி யூழியனற் றீபமிட விளங்குவார்.

உரை. தாயே, நின் மெய்யினின்றும் பிரிதலைப்பெறும் அணி மாதி சித்திகள் நின்று தொழாநின்ற எக்காலமும் அழியாத உன்னு டையதாகிய இம் மேனியினைத் தம்முடைய மேனியெனத் தெளிவு பெற்று மனத்தால் பாவிப்பவர் சிவந்த மேனியையுடைய உருத்திரன் வாழ்வும் மகாப்பிரளயகாலத்தில் சிதைவதாமென்று அதனை நிந்தி த்து, வெய்ய மேனியையுடைய பிரளய காலாக்கினி வந்து தீபமாக நிற்க அக் காலத்தும் அழிவுபடாமல் விளங்குவார்.

குறிப்பு. உம்மை - சிறப்பு. (கூகூ)

தாமாக உனைநினைவோர் தவமிறுகத் தனமிறுகி
மாமோகப் புன்முறுவன் மனங்கவரக் கடைவிழியாற்
காமாதி பலருதிப்பக் கடம்பலர்க்கே முறச்சிவனீ
யாமாமென் றயிர்ப்பமய லளிப்பரா மரும்பொருளே.

உரை. அரியபொருளாய் இருக்கின்றவளே, உன்னைத் தாமாக நினைவோர் நினையும் அத் தவம் முற்றுப்பெற, தம்முடைய முலை முற்றுப்பெற்று, மிக்க மோகத்தைத் தரும் புன்சிரிப்புச் சிவனுடைய மனத்தைக் கவர, கடைக்கண்ணாற் காமன் முதலாகிய பலரும் உதி

ப்ப, மெய் கடம்பலர்போலும் நிறமுறச் சிவனனவன் தனித்தனியே தம்மை நீதானே யென்று ஐயமுற அவனுக்கு ஆசையால் வரும் மயக்கத்தைக் கொடுப்பார்.

குறிப்பு. இதனால் உன்னிடத்தே சாயுச்சியம் அடைவர்கள் என்றவாறாயிற்று.

'காமாதி பலருதிப்ப' என்றதனானே நமனும் நமன் றூதரும் உதிப்பது கொள்க.

அளிப்ப ரென்பதன்க ணின்ற ஆமென்பது அசை.

இவ்விரண்டு கவியும் தியானிப்போர் அடையுந்தன்மை கூறின.

சுந்தரிநின் றெண்டர்தமைத் தோய்வதற்கு நாமகளு
மிந்திரையு மலரயன்மா லிடருழப்ப விரதிபின்க
ணந்தமில்பே ரழகொடுகற் பழித்துநெடு நாள்கழியச்
சிந்தையுறு பாசம்போய்ச் சிவமயத்தைச் சேர்குவரால்.

உரை. திரிபுரசுந்தரி, நின்னுடைய அடியாரானவர் தம்மைக் கல்வியைக்குறித்துஞ் செல்வத்தைக் குறித்தும் முறையே நாமகளும் திருமகளும் வந்துதோய்வதற்கு முறையே மலரின்மேல் இருக்கின்ற அயனும் மாலும் இடருழப்ப, முடிவில்லாத பெரிய அழகுடனேகூடி இரதியினிடத்துக் கற்பைக் காமன்மெலிய அழித்து இன்பத்தை நுகர்ந்து, நெடுநாள்கழியப் பின்பு சிந்தையில் உற்ற மயக்கமெல்லாம் போகச் சிவரூபத்தை அடைகுவார்.

குறிப்பு. 'மலரயன்மா லிடருழப்ப' என்பதனால் காமன் மெலிய என்பது வருவிக்கப்பட்டது.

இது அடியார் பெறும் இம்மை மறுமைப்பயன் கூறியது.(க0க)

சேமநிதி யேயமுதே தேனேநற் குணக்கடலே
யாமளையே யன்பர்மனத் திருந்துமுளைக் கடங்காத

கோமளமே யம்மேநின் கோகனதத் தாள்வழுத்து
மாமறைபோ லென்பாடல் வண்டமிழுங் கொள்வாயால்.

உரை. சேமத்தில் இருக்கும் நிதிபோல்பவளே, அமுதம் போல்பவளே, தேன்போல்பவளே, நற்குணமாகிய கடலையுடையவளே, யாமளையே, அன்பருடைய மனத்தின்கண் இருந்தும் அவர் உரைக்கு அடங்காத கோமளத்தை யுடையவளே, தாயே, நின்னுடைய தாமரைபோலும் தாளை வழுத்தாநின்ற மாமறைபோல், என்னுடைய பாடலாகிய வளவிய தமிழுங் கொள்வாயாக.

குறிப்பு. கோமளம் - இளமைச்செவ்வி.

'ஒரும்மை - சிறப்பு; ஒரும்மை - எச்சம்.

இதனுள், உவமையைப் புகழ்ந்து உவமித்தவதனால், புகழுவமையென்னும் அலங்காரங் காண்க. (௧0௨)

அறுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

ஆதவனுக் கவன்கிரணத் தங்கியைக்கொண்
டாலாத்தி சுழற்ற லென்கோ
சீதமதிக் கவனில்வி ளெழுதுசிலைப்
புனல்கொடுப சரிப்ப தென்கோ
யோதியமைக் கடல்வேந்தை யவன்புனலான்
முழுக்காட்டு முறைமை யென்கோ
நீதருசொற் கவிகொடுனைப் பாடியுன
தருள்பெறுமென் னீதி யம்மே.

உரை. தாயே, நீதந்த சொல்லாற் றொடுக்குங் கவிகொண்டு உன்னைப் புகழ்ந்துபாடி உனது அருளைப்பெறும் என்னீதியைச் சூரியனுக்கு அவன் கிரணமாகிய அனலைக்கொண்டு தீபாலாத்தி சுழற்றுத லென்று சொல்வேனோ? குளிர்ச்சியையுடைய மதியை அவன் நிலவி

னல் ஒழுகுஞ் சந்திரகாந்தப் புனல்கொண்டு உபசரிப்பதென்று சொல்வேனே? திரை ஒன்றோடொன்று மோதிய கறுப்பையுடைய கடல் வேந்தனாகிய வருணனை அவனுடைய புனலின் முழுகச் செய்யும் முறைமை என்று சொல்வேனோ? நீ சொல்வாயாக.

குறிப்பு. நான்கனுருபை இரண்டனுருபாகக் கொள்க.

முழுகவாட்டு மென்பது முழுக்காட்டும் எனக் கடைக்குறை விகாரம்.

ஒகாரங்கள் - வினா.

இதனுள், நின்கவியால் உன்னைப் பாடுவதென முன்னொன்று தொடங்கி, அதனை முடித்தற்கு வேறுவேறாக மூன்றுவகைப் பொருளெடுத்துக் கூறியவதனால் வேற்றுப்பொருள் வைப்பு என்னும் அலங்காரம் காண்க.

இவ்விரண்டு கவியும் இப்பனுவலை ஏற்பிக்கும்வண்ணம் கூறின.

எழுசீர்க் கழிநெடி லாசிரிய விருத்தம்.

வேத நுண்பொரு ளாதி சுந்தரி
    வீற டங்கலு மாயமே
யீத றிந்து விடாதசொ லுங்கவி
    ராஜ பண்டிதன் வீரையா
னாத ரஞ்சகி தாள்பெ றுந்திரு
    நாம மொன்பது நாறுமே
யோதி னன்பல போக முஞ்சிவ
    லோக முய்பெறு வார்களே.

இதன்பொருள் - வெளிப்படை.

சௌந்தரியலகரி மூலமும் உரையும்

முற்றுப்பெற்றது.



## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 80 | 12 | விருந்து | விருத்து |

உ

சிவமயம்.

# சௌந்தரியலகரிச்

## செய்யுள் முதற்குறிப் பகராதி.

ளந்தரியலகரிச்

செய்யுள் முதற்குறிப் பகராதி முற்றிற்று.

